உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 17 } பிரஜோற்பத்திஸ்ரீ தைமீ கஉ
1932ஸ்ரீ ஜனவரிமீ 14உ { பகுதி 7

## கடவுள் வணக்கம்.

காற்றைப் பிடித்துமட் காகத் தடைத்தபடி
கன்மப் புனற்கு ளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்து ளெனையிருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குண் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
டோயநீ பாய்ச்சல்செய்து
நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியு
நமனென தீப்பூடும் அணுகாமல் முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுந்தருளி யெனையாள வல்லையோ
பெரியவகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகியம்மையே. (1)

---

செகத்தையெல்லாம் அணுவளவும் சிதருவண்ணம்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரளை யெல்லா
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீ நினைந்த வாறேயெல்லாம். (2)

---

உரையிறந்த அன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த இன்பக்கடலே பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் சிவபோகமாகிய நெல்லினைக் கொள்ளவேண்டுவதே பயனும் என்கிறார்.

(இ-ள்) பெரிய அகிலாண்ட கோடிகளைப் பெறாது பெற்ற இறைவியே! பெரிய கயிலைமா நகரில் எழுந்தருளியிருக்கிற பெரிய நாயகி அம்மையே! வாயுவைப் பற்றி மட்பாண்டத்தில் அடைத்தது போல் கருமமாகிய நீரில் ஊறிக்கொண்டிருக்கும் இழிந்த ஒன்பது வாயில்களையுடைய பச்சை மண் பாத்திரம் போன்ற உடம்பினுள்ளே அடியேனை இருக்கச் செய்து, சோற்றை ஏற்றி, நீ கட்டிவைக்க, துருத்தியிலடைத்து வைத்த கள்ளைப் போல் துள்ளிப் பதைத்து என்ன பயன் அடைந்தேன்? ஒன்றும் இல்லை. ஆதலால் நீ உனது திருவருளாகிய நீரைப் பாய்ச்சி, நாற்றைப் பதித்தாற் போல் ஞானமாகிய பயிரை நட்டு, ஐம்புலன்களாகிய பட்டிமாடுகளும் யமன் என்று சொல்லப்படுகிற தீப்பூடும் சேராமல் எதிரில்நின்று விரும்புதற்குரிய சிவபோகமாகிய பயனைப் பகுத்தருளி அடியேனை ஆண்டருளவல்லையோ? என்பதாம்.

காற்றுக்கு நிகராகிய உயிரையும், மண்பாண்டத்திற் கொப்பாகிய உடலையும் நம்பித் தோற்பையில் கள் பொங்குவது போல் உலகில் வீணே குதித்தாடித் திரிவதில் எத்தகைய பயனும் இல்லை எனவும், மனமாகிய வயலில் அருளாகிய தண்ணீர் பாய்ச்சி, ஞானமாகிய பயிரை விளைவித்து, புலன்களாகிய பட்டி மாடுகள் மேய்ந்திடாமலும், எமனாகிய தீப்பூண்டு விளையாமலும் காத்துச் சிவபோகமாகிய நெல்லினைக் கொள்ளவேண்டுவதே பயனாகும் என்க.

2. இதனால் இறைவனின் சர்வ வல்லமையைக் கூறுகின்றார்.

(இ-ள்) உலக மனைத்தையும் அணுமாத்திரமேனும் கெடாத வகையில் பரமாணுவினிடத்து ஒடுக்குவை. பரமாணுத் திரளை யெல்லாம் வியப்படையுமாறு பெரிய சகமாக உண்டாக்கும் வல்லவனே! யாவும் நீ சங்கற்பித்த படியே ஆகும் என்க.

ஊழிக்காலத்திவ் உலக மனைத்தையும் ஒடுக்கி யருளும்போது மாயா காரணத்தை யடையு முன்னின்ற அவசரம் அணுவளவாக நிற்கு மாதலானும், மறுபடியும் மாறுபடுகிற காலத்தில் அவ்வணு காரணப்பிரபஞ்சமாக விரியு மாதலானும், இங்ஙனம் காரிய காரணப்படுகின்ற காலத்தில் ஒரு சிறிதும் இல்லது வாராமலும், உள்ளது போகாமலும் நியதியாக நடப்பது முதல்வன் சங்கற்பத்தின்படியே யாகலான் "வல்லவா நீ நினைந்தவாறே யெல்லாம்" என்றனர்.

3. (இ-ள்) மௌன முற்ற அடியார் மனத்தினிடத்தே பெருஞ் சோதியாய் வளர்ந்து, அளவின்றி நிறைந்து விளங்கும் சுகக்கடலே என்க. இதனால் அச்சுகம் அருளவேண்டும் என்பது குறிப்பு.




## காந்தியடிகளின் சிறையீடு



உலகம் முழுதும் ஜனநாயகத்துவ—மக்கட்குப் பொறுப்புள்ள ஆட்சிமுறை உணர்ச்சி பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. பெரும்பான்மையான நாடுகள் சுதந்தர ஆட்சியை நடத்திவருகின்றன. நமது நாடு சுதந்தர ஆட்சியின்பங் கண்டு பல நூற்றாண்டுகளாகிவிட்டன. சமத்துவ சகோதரத்துவ சுதந்தரங்களை உலகில் நிலைநாட்டுவதாகப் பெருமை பேசும் பிரிட்டிஷ் ஜாதி சுமார் இருநூறாண்டுகளாக இந்தியாவை ஆண்டுவந்திருந்தும் விமோசனம் விரைவில கைகூடும் என்று விளங்கவில்லை. காங்கிரஸ் மகாசபை பாரத அன்னையின் அடிமை நீக்கத்தின்பொருட்டு நாற்பத்தாறாண்டுகளாகத் தொண்டாற்றிவருகிறது. ஆனால் காந்தியடிகள் காங்கிரஸில் நுழையுமுன் அது சாதாரண உத்தியோக வேட்டைச் சபையாகவும், படித்த கூட்டத்தின் ஆதிக்கந் தாங்கிய சபையாகவும் இருந்துவந்தது. காந்தியடிகளே அதை ஏழை மக்களின் விடுதலைச் சபையாகச் செய்தார். இப்பொழுது காங்கிரஸ் ஒன்றே முப்பத்தாறு கோடி மக்களின் தனிப் பெரும் பிரதிநிதித்துவ சபையாக விளங்குகிறது. இவ்வுண்மை பழைய ஒத்துழையாமைக் காலத்திலும், சென்ற ஆண்டிலும் நன்கு வெளிப்பட்டது. சென்ற ஆண்டில் எழுபதினாயிரம் பேர் சிறை சென்றமை ஒன்றே காங்கிரஸின் பொது ஜனச் செல்வாக்கைக் காட்டுவதற்குப் போதிய சான்றாகும். காங்கிரஸ் இப்பொழுது காந்தியடிகள் வழிநின்று கடனாற்றி வருகிறது. காந்தியடிகள் சத்திய அஹிம்ஸா தருமத்தை உயிராகப் போற்றி உலகத்திற்கே வழிகாட்டி வருகிறார். நமது அடிகள் திரிகாண சுத்தியாய்—சொல்லொன்று செயலொன்று இன்றித் தங்கடமையை உறுதியுடன் நிறைவேற்றி வருகிறார். தமது கொள்கையை நிலைநாட்ட மகாத்மா எத்தகைய துன்பத்தையும் மேற்கொள்ளத் தயாராயிருக்கிறார்.

அஹிம்ஸா தருமமூர்த்தி—மகாத்மா காந்தியடிகள் சென்ற மாதம் சிறைப்பட்டார் என்ற செய்திகேட்டு இந்தியா மாத்திரம் அல்ல, உலக முழுதும் துன்பக்கடலுள் மூழ்கிவிட்டது. காந்தியடிகளும் சர்தார் படேலும் 1827-ம் ஆண்டின் 25-வது ரெகுலேஷன் கீழ் பம்பாயில் கைத்து செய்யப்பெற்று எரவாடா சிறையில் வைக்கப்பெற்றிருக்கின்றனர். வங்கச் சிங்கமாகிய ஸ்ரீ ஜத். சுபாஷ்சந்திரபோஸ் அவர்கள் 1818-ம் ஆண்டின் 3-வது ரெகுலேஷன்கீழ் கைது செய்யப்பெற்று சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார். உக்கி மக்கிக் கிடந்த பழைய ரேகுலேஷன்களெல்லாம் மேலே இழுக்கப்படுகின்றன. இவற்றிற்கு விசாரணை தேவை இல்லை. சிறைவீட்டிற்கும் கால வரையறை இல்லை. அவசரச் சட்டங்களின் ஆதாரவில் ஆட்சி நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது தேசத் தலைவர்களின் மீது இத்தகைய சட்டங்கள் பிரயோகிக்கப்படுவது சகஜமேயாகும். வரிசை வரிசையாகக் காங்கிரஸ் தலைவர்களும் தொண்டர்களும் கைது செய்யப்படுகின்றனர். இப்பொழுது இந்தியா முழுவதிலும் அவசரச் சட்டங்கள் அமல் செலுத்திக்கொண்டிருக்கின்றன. அரசாங்கத்தார் தங்கள் பெருமையைக் காப்பாற்றலே பெரிதாக நினைத்துவிட்டார்கள்.

காந்தியடிகள் சாந்தசீலர்—சமாதானப் பிரியர். எவ்விதத்திலேனும் சமரஸம் ஏற்படவே காந்தியடிகள் அல்லும் பகலும் அரும்பாடுபட்டார். வைசிராய் வில்லிங்டன் பிரபுவின் மனோநிலை அதற்கு இடங்கொடுக்கவில்லை. காங்கிரஸ் வேறு நிவர்த்தி இல்லாமை கண்டு சட்டமறுப்பில் இறங்கவேண்டிய முடிவைச் செய்தது. அப்பொழுதும் சமரஸத்திற்கு இணங்கிய முறையிலேயே அம் முடிவைக் கைக்கொண்டது. இறுதியில் வைசிராய் பிரபு உங்கள் அச்சுறுத்தலைக் கண்டு நான் அஞ்சப் போவதில்லை என்று மறுமொழி கொடுத்துவிட்டார். காங்கிரஸிற்கோ காந்தியடிகட்கோ அரசாங்கத்தாரை அச்சுறுத்தவேண்டும் என்ற நோக்கம் ஒரு சிறிதும் இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். நிலப்படை, நீர்ப்படை, ஆகாயப்படை முதலிய படைவலியும், பொருள்வலியும், அறிவுவலியும் படைத்துச் சர்வ வல்லமையுடன் விளங்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்தை வெறும் அச்சுறுத்தல்களால் ஒன்றும் செய்யமுடியாது என்பதைக் காங்கிரஸ் உணர்ந்தே இருக்கிறது. காந்தியடிகளும் நன்கு உணர்வர். முப்பத்தாறு கோடி மக்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றித் தவிக்கும் இழிநிலையே காங்கிரஸையும் காந்தியடிகளையும் இந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டிருக்கின்றது என்னும் உண்மையை அரசாங்கத்தார் அறிந்துகொள்ள விரும்பாதது பெரிதும் வருந்தத்தக்கது.

முதலில் காந்தியடிகளின் ஒத்துழைப்பை அரசாங்கத்தார் வேண்டினர். தயங்கித் தயங்கி இறுதியில் காந்தியடிகளும் வட்ட

மேஜை மகாநாட்டில் கலந்து கொண்டார். வில்லிங்டன் பிரபும் அடிகட்கு ஆசிகூறி அனுப்பினார். காந்தியடிகளை நேரிற் கண்டதும் இங்கிலாந்து பகைமை நீங்கி அன்புடன் கட்டித் தழுவியது. நமது அருள் வள்ளல் இந்தியாவின் இழி நிலையை—காங்கிரஸின் வேட்கையை ஒளிமறைவின்றி எடுத்து விளக்கினார். இதற்கு இங்கிலாந்து அநுதாபம் காட்டியது—உலகமே அநுதாபங் காட்டியது. வட்ட மேஜை மகாநாடு வெற்றி பெறவில்லை. ஆனால் தோல்வி என்றும் கூற முடியவில்லை. அதனால் மேலும் அதனுடன் ஒத்துழைக்கும் மனப் பான்மையுடனேயே காந்தியடிகள் இந்தியாவுக்கு வந்தார். இங்கு வந்து அவர் கண்ட காட்சி என்னை? அவசரச்சட்டங்கள்! அடக்கு முறைகள்! தோழர்களின் சிறையீடுகள்! இக்காட்சிகளைக் கண்டும் நமது அஹிம்ஸாமூர்த்தி ஆத்திரங்காட்டவில்லை. படபடப்புக் காட்ட வில்லை. வைசிராயை நேரில் கண்டு பேசவேணடும் என்றே விரும்பி னார். வைசிராய்ப் பிரபு அவசரச் சட்டங்களைப்பற்றியும், அடக்கு முறைகளைப்பற்றியும் பேசவேண்டியது அநாவசியம்; சமீபத்தில் இந் தியாவுக்கு வரப்போகும் வட்டமேஜை மகாநாட்டுக் கமிட்டிகளுடன் ஒத்துழைப்பதைப்பற்றியே பேசவேண்டும் என்று கூறினார். ஒத்து ழைப்புக்கு நாட்டில் அநுகூலமான—சமாதானமான நிலைமை வேண் டாமா? அஃதின்றி எவ்வாறு ஒத்துழைக்க முடியும்? என்றே நமது சமாஸமூர்த்தி தயங்கினார்.

மகாத்மாகாந்தி யடிகளின் அருண்மொழிகட்கு உலகமெல்லாம் —நாகரிக நாடுகளெல்லாம் எதிர்நோக்கி நிற்கின்றன. இத்தகைய உலகம் போற்றும் உத்தமரை-முரண்கொண்ட லங்காஷையரும் கட் டித் தழுவி வரவேற்ற மூதறிஞரை—இர்வின் போற்றிய மகாத்மா வை—இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் சமரஸ வாழ்வுண்டாக்கக் கூடிய பெரியார் என்று ஜனரல் ஸ்மட்ஸ் போன்றார் கொண்டாடிய சாந்தமூர்த்தியை—உலகத்திற்கே புத்துயிரும் புதுவாழ்வும் அளிக்க வந்த ஆதர்ஸ புருஷரை நமது அரசாங்கம் சிறைப்படுத்திவிட்டது. காந்தி யடிகட்குச் சிறைவாசம் ஒன்றும் செய்யாது. அடிகள் சிறைச் சாலையைத் தவச்சாலை யாகவே கருதி உற்சாகமாய்க் காலங் கழிப் பார். இனி நாட்டின் நிலைமை என்னாகுமோ என்றே நாம் பெரிதும் அஞ்சுகின்றோம்.

காலச்சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது. உலகம் என் றும் ஒரே நிலையில் இருப்பதில்லை. உயர்ந்தன தாழும்—தாழ்ந்தன உயரும். இந்தியா இப்பொழுது விழித்துக் கொண்டது. சுதந்தர வேட்கையால் துடி துடித்துக் கொண்டிருக்கிறது. "நான் யார்? எனது பூர்வோத்தரம் என்ன? உலகத்திலுள்ள மற்ற நாடுகளெல்லாம் சுதந்தர இன்பம் நுகர்ந்து சுயமரியாதையுடன் வாழும்போது நான் ஏன் அடிமை வாழ்வில் அலக்கணுற்று மயங்கவேண்டும்?" என்று

பாரத அன்னை தன்னைப்பற்றி விசாரணை செய்யத் தொடங்கிவிட்டாள். இனி அவளது வேட்கை சிறுதேனும் நிறைவேறாமல் தணிந்துவிடாதென்பது உறுதி. முப்பத்தாறு கோடி மக்களை ஈன்றெடுத்த அன்னை தனது ஆவலை நிறைவேற்றிக்கொள்ளவே காந்தியடிகளை அளித்துள்ளாள். காந்தியடிகள் காங்கிரஸ் வழி நின்று அன்னைபணி செய்ய அன்புநெறியில் நிற்கின்றார். இவ்வுண்மையை உலகம் அறியும். ஆனால் நம்மைக் காக்கும் பொறுப்பேற்றுள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் அறிந்து கொள்ளாதது வியப்பினும் வியப்பாயிருக்கின்றது.

இந்தியா—இங்கிலாந்து ஆகிய இருநாடுகட்கும் நலம் பயக்கும் கோரிக்கைகளையே காந்தியடிகள் வேண்டுகிறார். இங்கிலாந்துக்கோ மற்ற நாடுகட்கோ துரோகம் செய்யும் கருத்து காந்தியடிகட்கு ஒரு சிறிதும் இல்லை என்பது வெளிப்படை. இந்திய மாதாவின் அடிமைத்தளை நீங்கவேண்டும், அவள் சுய மதிப்புடன் வாழவேண்டும் என்றே அவர் கூறுகிறார். இதுவும் குற்றமாகுங் கொல்?

சென்ற ஆண்டில் சட்ட மறுப்புப்போர் தீவிரமாய் நடைபெற்றது. ஆண்—பெண்—குழந்தைகள் அடங்கலும் அப்போரில் கலந்து கொண்டனர். அரசாங்கத்தார் அடக்குமுறைகளையும் அவசரச் சட்டங்களையும் அடுக்கடுக்காகப் பிரயோகித்தனர். உயிர்ச்சேதம் பொருட் சேதங்களோடு பற்பல கஷ்ட நஷ்டங்களும் உண்டாயின. எனினும் நாட்டு மக்களின் உணர்ச்சியும் வேட்கையும் வீறு கொண்டே விளங்கின. மிகுந்த ஆற்றல் வாய்ந்த பிரிட்டிஷ் அரசாங்கமும் அக்காலத்தில் வைசிராயாக விளங்கிய லார்டு இர்வின் மூலம் காந்தி—இர்வின் ஒப்பந்தம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இப்பொழுது அவ்வொப்பந்தம் அலக்ஷியம் செய்யப்பட்டமைக்கு யார் பொறுப்பு என்று கேட்கின்றோம்.

மகாத்மாகாந்தியடிகட்கு வைசிராய் அவர்கள் பேட்டி அளிக்க மறுத்தது தவறு என்று பல்வேறு பிரிவினரும் கண்டித்திருக்கின்றனர். இந்திய க்ஷேமாபிவிருத்தி சங்கத்தலைவர்களும், மிதவாதத் தலைவர்களும், மிஸ்டர் பென்தால் முதலிய ஐரோப்பியத் தலைவர்களும் சமாதானத்திற்குரிய வழி காணத் தங்கள் பிரதிநிதிகளையேனும் சந்தித்துப் பேசவேண்டும் என்று விரும்பினர். ஆனால் அரசாங்க மனப்பான்மை அடக்குமுறையில் ஆழ்ந்து விட்டது. அடக்குமுறையால் நடத்தப்படும் ஆட்சிமுறை பயனின்றிக் குழப்பத்திற்கே காரணமாகும் என்னும் உண்மையை அரசாங்கத்தார் அறியாரோ?

நமது நாட்டில் வெறிகொண்ட புரட்சி இயக்கம் ஒன்று உலவி வருகிறது. இவ்வியக்கத்தில் முனைந்து நிற்போர் அனைவரும் இளைஞரே. இவர்கள் தேச விடுதலையின் போால்-தேச பக்தியின் போால்

அநேக அட்டூழியங்களையும் கொடுமைகளையும் இழைத்து வருகின்றனர். வங்காளம்—பாஞ்சாலம் முதலிய மாகாணங்களில் இவ்வியக்கம் தலைவிரித்தாடுகிறது. ஒன்று மறியாத இளஞ்சிறுமிகளும் இதில் சேர்ந்து கொலை முயற்சிகளில் ஈடுபடுகின்றனர் என்றால் அதன் பயங்கரப்போக்கை விரித்துரைக்க வேண்டியது அநாவசிய மென்றே கருதுகின்றோம். இத்தகைய புரட்சி உணர்ச்சி தலைதூக்கி நிற்கும் இக்காலத்தில் அஹிம்ஸா தருமத்தில்—சத்திய சன்மார்க்கத்தில்—சமாதான நெறியில் நின்று தொண்டாற்றிவரும் காந்தியடிகளையும் காங்கிரஸ் தலைவர்களையும் அரசாங்கத்தார் அடக்க முற்பட்டது நீதியாகுமா என்று கேட்கின்றோம்? புரட்சிக் கூட்டத்திற்கு ஒரு சிறிதும் இடங்கொடுக்கக்கூடாது—அதை எவ்விதத்திலேனும் தலை தூக்காமற் செய்யவேண்டும் என்று ஆழ்ந்து சிந்தித்த பின்னரே காந்தியடிகள் சென்ற ஆண்டில் சத்தியாக்கிரக இயக்கத்தை ஆரம்பித்தார் என்ற உண்மையை அரசாங்கத்தார் உணர்ந்திருக்க வேண்டும். காங்கிரஸுடன் கலந்து ஏதேனும் ஒரு சமரஸ முடிவுக்கு வந்திருந்தால் எத்தகைய புரட்சியையும் எளிதில் அடக்கிவிடலாம் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. அடக்குமுறைகளோ அவசரச் சட்டங்களோ போடவேண்டிய அவஸ்தையும் அரசாங்கத்தாருக்கு இல்லாமற் போயிருக்கும். ஆனால் அதிகாரிகள் இதை ஒரு சிறிதும் லக்ஷியம் செய்யாமலே மனம்போன போக்கில் நடக்கத் தலைப்பட்டுவிட்டனர். இனிமேலேனும் நாட்டின் நிலைமையையும் மக்களின் உணர்ச்சியையும் மதித்து அரசாங்கத்தார் சமாதானத்திற்கு இணங்க விரும்பவேண்டும். இதற்கிடையில் மக்கள் காந்தியடிகளின் உபதேசங்களைத் தீவிரமாய்க் கடைப்பிடித்து ஒழுகவேண்டும். "எந்தச் சந்தர்ப்பத்திலும் பலாத்காரம் அணுவளவேனும் தலை காட்டக்கூடாது. எவ்வளவுக்கெவ்வளவு துன்பம் சகிக்கும் பழக்கம் வளர்ந்து கொண்டே போகுமோ அவ்வளவுக்கவ்வளவு மக்கள் விடுதலைக்கு—சுயராஜ்யத்திற்குத் தகுதி படைத்தவராவர். மக்கள் முன்னிலும் பன்மடங்கு அதிகமாக அஹிம்ஸா தருமத்தை மேற்கொள்ளவேண்டும், பலாத்காரம் கனவிலும் கருதக்கூடாது" என்று நாட்டுமக்கட்கு அடிகள் வேண்டுகோள் விடுத்துள்ளார். அவ்வேண்டுகோளை உறுதியாகக் கடைப்பிடித்தொழுகுமாறு யாம் மக்களெல்லோரையும் பணிவுடன் வேண்டிக் கொள்ளுகின்றோம். எல்லாம்வல்ல ஆண்டவன் முன்னின்று காப்பானாக.

ஓம் தத் ஸத்.



# பொங்கற் புதுநாள்



வரகூர். ச. சூரியநாராயணமூர்த்தி



வீர பத்தினியாய் விளங்கிய கண்ணகி
பிறந்த விந்நாட்டிற் பிறந்திடும் பெண்கள்
பொங்கற் புதுநாள் போந்தது கண்டு
சங்கராந்தியாச் சார்ந்த விந் நாளில்
பொங்கலோ பொங்கல்! பொங்கலோ பொங்கல்!
பொங்கலோ பொங்கல்! என்று கழறுமின்.
இல்லற இன்பம் ஓங்கி வளரவே
அல்லும் பகலும் மகிழக் கூடுமின்!
சர்க்கரைப் பொங்கல் தளரா துண்டு
கற்பு நெறியிற் கலங்காது வாழ்தலே
மேம் பாடுடைத்தென எண்ணியே நீங்கள்
கதராடை யுடுத்தி பொன்கல மந்துளி
உத்திராயணமே வோங்கு மிந் நாளில்
நித்திய வின்பம் நிலவிய மகிழ்வொடு
தாயினு மினிய நந்தண்டமிழ் மொழிக்குத்
தூய மனத்தாற் தொண்டுபுரிந்து
புவியெங்கணுமே எழில் பெரும் பொங்கல்
சிவனது அருளால் ஆயிரங் கண்டு
எண்ணிய எண்ண மெல்லா மெய்திடுமாறு
புண்ணியப் பொலிவாம் இறைவனை இறைஞ்சுமின்!
பலவேறு துறைகளிற் பயன்பெறல் வேண்டி
பெற்றோர் தங்கள் பெறற்கருஞ் சிறார்களைக்
கற்றோராக்கித் தேச நலம் பெருகவே
உண்மையாம் தொண்டுகள் பல பல புரிந்து
காலங் கழிப்பீர்; பொங்கல் பொங்கி
வாழ்க்கைக் கேற்ற வழிகளைக் காட்டி
வாழ்மின் நண்பீர்! வாழ்மின்! வாழ்மின்!!
வாழ்மின்! வாழ்மின்! வளம்பெற வாழ்மின்!
பொங்குக! பொருளும் பொங்குக! ஞானம்
ஓங்குக! நேயம் பெருக! அறமும்
ஓங்குக! தேச நலம்வளர்க! பொங்கல்
பொங்குக! பொங்குக பாலும்! பொங்குக
பொங்குக! ஆனந்த போதினியின் புகழும்
பொங்குக! பற்பல வாண்டு பாந்து வாழியவே.




# வீரமா முனிவர்.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ. பி. எல்.)

தமிழ் அகராதியின் தந்தையாய் விளங்கும் வீரமாமுனிவர் 'தேம்பாவணி' யென்னும் நறுந்தமிழ் மாலை புனைந்து தமிழ் மொழிக்கு அழகு செய்தார். சூதேய நாட்டிற் பிறந்து செம்மையுற்ற சூசையப்பர் என்னும் வளன் பெருமையை விரித்துரைக்கும் அவ்வளமார்ந்த காவியத்தில், தெய்வத் திருக்குறளின் தெள்ளிய மணமும், சிந்தாமணியின் செவ்விய கற்பனை நலமும், கலைமலிந்த கம்பர் கவி நயமும், ஆங்காங்கு அமைந்து அழகு செய்யக் காணலாம். தமிழ் நூன் முறைக்கிணங்க, தேம்பாவணியில், தெய்வ வணக்கம் கூறப்போந்த முனிவர்,

"சீரிய உலகமூன்றும் செய்தளித் தழிப்பவல்லாய்
நேரிய எதிர்ஒப்பின்றி நீத்தவோர் கடவுள் தூய
வேரிய கமலபாதம் வினையறப் பணிந்து போற்றி
ஆரிய வளன்றன் காதை அறமுதல் விளங்கச் சொல்வாம்."

என்றருளிய அருங் கவியில், கம்பர் கவிமணம் கமழக் காணலாம. முழுமுதற் பொருளாய இறைவனைப் பெயராற் குறியாது, முத்தொழில் புரியும் முறைமையாற் புகழும் முனிவர் மொழிகள் அறிந்து மகிழ்தற்குரியனவாம். மும்மை சால் உலகமெல்லாம், படைத்தும் காத்தும் கரந்தும் விளையாடும் கடவுளை "சீரிய உலகம் மூன்றும் செய்து, அளித்து, அழிப்பவல்லாய்" என்று செம்மைசான்ற மொழிகளாற் சிறப்பித்தார். தனக் குவமையில்லாத் தனிப் பெருந் தலைவனை, "நேரிய எதிர் ஒப்பில்லான்" என்று நெஞ்சாரப் புகழ்ந்தார். இருள்சேர் இருவினையும் கடந்து, அப்பாலுக் கப்பாலாயமைந்த ஐயனை "நீத்தவோர் கடவுள்" என்று நிகழ்த்தினர். உள்ளுவார் உள்ளத்தில் ஆனந்தத் தேன் சொரியும் வள்ளலின் திருவடியை 'வேரிய கமலபாதம்' என்று வியந்துரைத்தார். இவ்வாறு வீரமாமுனிவர் தேம்பாவணியி லமைத்த தெய்வ வணக்கம்,

"உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே."

என்னும் கம்பர் கவியை நினைவூட்டுவதாகும். இன்னும் சூசை யென்னும் வளன் கதையை வளமார்ந்த பாலாழி யென்றும், அக்கதையை ஆர்வத்தனுய்ப்

பருகலுற்ற தம்மை ஆசையுற்ற பூசை யென்றும், நுணங்கிய கேள்வியராய முனிவர், வணங்கிய வாயினராய்க் கூறும் மொழிகள், கம்பர் அவை யடக்கக் கவியினைத் தழுவி யெழுந்தனவே என்பதில் ஐயமில்லை. எண்ணரிய நலம் வாய்ந்த இராம காதை எழுதப்போந்த கம்பர்,

"ஓசைபெற்றுயர் பாற்கடலுற்றொரு
பூசைமுற்றவும் நக்குபு புக்கென
ஆசைபற்றி அறையலுற்றேன் மற்றிக்
காசில் கொற்றத்திராமன் கதையரோ."

என்றருளிய அவையடக்கக் கவியினையும்,

"சூசையுற்றன வரங்கள் தூய்கடல் கடக்கல் இல்லா
ஓசையுற்றொழு கமிர்தம் உடைகடலென்ன நண்ணி
பூசையுற்றதனை நக்கப்புக்கென உளத்தைத் தூண்டும்
ஆசையுற்றாமனேனும் அருங்கதை அறையலுற்றேன்."

என்னும் தேம்பாவணிக் கவியினையும், ஒப்பிட்டு நோக்குவார்க்கு இவ்வுண்மை இனிது விளங்கும். "ஆசையுற்று ஊமனேனும் அருங்கதை அறையலுற்றேன்" என்று முனிவர் கூறும் மொழிகளும், "அன்பெனும் நறவம் மாந்தி மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன்" என்னும் கம்பர் வாக்கை ஆதரித்து நிற்கக் காணலாம்.

இனி, தேம்பாவணி யாசிரியர், நாட்டு வளம் கூறும் கவிகளிலும், நகர நலம் கூறும் கவிகளிலும், சிந்தாமணியின் சிறந்த வாடை வீசுகின்றது. தேமாவும், தீம்பலவும், தெங்கும் வாழையும் எங்கும் நிறைந்திருந்த ஏமாங்கத நாட்டைப் புகழப்போந்த சிந்தாமணி யாசிரியர்,

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் எற்றி
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங்கனி யோடு வாழைப்பழங்கள் சிந்தும்
ஏமாங்கதமென்னும் இசையாற்றிசை போயதுண்டே."

என்று செழுந் தமிழ் மொழிகளால் எழுதியமைத்தார். இக்கவியின் சுவை யறிந்த முனிவர், சூதேய நாட்டு வளங்கூறப் போந்தபோது,

"பாய்ந்த தேங்கதின் பழங்கள் வீழ்தலால்
வாய்ந்த வாழைமா, வருக்கை ஆசினி
சாய்ந்த தீங்கனி சரிந்த தேம்புனல்
தோய்ந்த வாயெலாம் இனிமை தோய்ந்தன."

என்று திருத்தி யமைத்துத் திளைப்பாராயினர். பாய்ந்த தெங்கின் பழங்கள் வீழ்ந்ததால், வாய்ந்த வாழைக் கனியும் மாங்கனியும், வருக்கைக் கனியும் ஆசினிக் கனியும் சிதைந்து சொரிந்த செந்தேன், சூதேய நாட்டுச் சோலை முழுமையும் பாய்ந்து நிரம்பிற்றென்று தேம்பாவணி கூறும் மொழிகளில், சிந்தாமணியின் செழுஞ்சுவை விளங்கக் காணலாம். இன்னும் வளமார்ந்த வயல்

களில் உழவர் நட்ட பசும் பயிர், கருவுற்றுக் காய்த்துக் கனிந்து தலை கவிழ்ந்து தாழ்ந்து நின்ற தன்மையை எழுதப்போந்த திருத்தக்க தேவர்,

"சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே."

என்று கனிந்த மொழிகளால் அருளிப்போந்தார். சிறியர் மிக மதிக்கும் செல்வத்தால் வரும் செருக்கினை அறுத்து, பெருமித மின்மையே பெருமை யென்னும் ஆன்ற உண்மையை அறிவுறுத்தக் கருதிய தேம்பாவணி யாசிரியர்,

"பூரியர் திருப்போல், தலைபசிய கூழ்நிறுவி
நீரினுர் தலைநேர, நேர் வளைவொடு பழுத்த
ஆரமானும் நெல்லறுத்து, அரிகொண்டு போயங்கண்
போரிதா மெனக்களித்தனர் போர்பல புனைவோர்."

என்று பைங்கூழ் பயந்த பான்மையைப் புகழ்ந்துரைத்தார். நீர்வளம் நிறைந்த வயல்களில் பொருள்படைத்த பூரியர்போல் நேராக நிமிர்ந்து நின்ற பசும் பயிர், கருவுற்று முதிர்ந்தபொழுது, புலமைசான்றவர் தலைபோல் தாழ்ந்து, முத்தனைய நெல்லைச் சொரிந்ததென்பது முனிவர் கவியின் கருத்தாகும். இங்ஙனம் சிந்தாமணி யாதிய சிறந்த தமிழ் நூல்களின் சுவையை வடித்தெடுத்து, தேம்பாவணியிலமைத்த முனிவர் கவித்திறம் கற்போர் கருத்தைக் கவர்கின்றது.

அரியதோர் அகராதி தொகுத்தும், அருங்காவியம் இயற்றியும் தண்டமிழ் மொழிக்குத் தொண்டு செய்த வீரமாமுனிவர், நன்னூல் முதலிய பன்னூல்களையும் ஐயந்திரிபற ஓதி யுணர்ந்து, 'தொன்னூல் விளக்கம்' என்னும் பெயரால் ஓர் சிறந்த இலக்கணம் செய்தருளினர். இந்நூல் எழுத்து முதல் அணியீறாகவுள்ள ஐந்திலக்கணங்களையும் அழகுறத் தொகுத்துரைக்கின்றது. நன்னூல் போலவே தொன்னூல் விளக்கமும் நூற்பாவால் அமைந்துள்ளது. இன்னும் உலக வழக்கில் அமைந்த தமிழின் தன்மையை ஆராய்ந்து 'கொடுந்தமிழ்' என்னும் பெயரால், முனிவர் மேலை நாட்டு லத்தீன் மொழியில் ஓர் இலக்கண நூல் வரைந்துதவினர். தமிழ்மொழியிற் பிழையறப் பேசவும் எழுதவும் கருதி முயலும் பிறநாட்டறிஞர்க்கு இந்நூல் பேருதவி யளிப்பதாகும். பழம் பெருமைவாய்ந்த தமிழகத்தார் பண்பினை, இத்தாலிய நாட்டினர் இனிதுணருமாறு, தெய்வப் புலமைத் திருவள்ளுவனர் இயற்றிய திருக்குறளின் அறத்துப் பாலையும் பொருட்பாலையும், முனிவர் லத்தீனில் மொழிபெயர்த்தமைத்தார்.

இன்னும் இவர் இயற்றிய காவலூர்க் கலம்பகம், கலிவெண்பா, கித்தேரியம்மானை, அன்னை அழுங்கல் அந்தாதி முதலிய செய்யுள் நூல்களையும் வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், வாமன் கதை, குருபரமார்த்தன் கதை முதலிய வசன நூல்களையும் பின்னர் ஆராய்வோம்.

# குருவாயூர்க் கோவில் சத்தியாக்கிரகம்

குருவாயூர் ஆலயப் பிரவேசச் சத்தியாக்கிரகத்தை ஆக்ஷேபித்து ஜாதி ஹிந்துக்களின் பெயரால் கொடுக்கப்பட்ட மனுவில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

ஒரு மனிதனை அவனுடைய கூட்டத்தைக்கொண்டு நிதானிக்கிறோம். தீயவர்களுடன் சேரக்கூடாதென்ற பழமொழி சகஜமாக விருக்கிறது. மனித சரீரத்தில் மூன்றுவித குணங்கள் சதா மாறிக்கொண்டே யிருக்கின்றன. கீழ்த் தரமானவர்களிடம் தாமஸ குணம் அதிகமாயும், உயர்ந்தவர்களிடம் ஸத்வ குணம் மிகைப்பட்டுமிருக்கும். ராஜஸ குணம் அன்பு, ஆசை, செய்கை முதலியவற்றை யுண்டு பண்ணுகிறது. மிருகத்தன்மையுள்ள மனிதன் பல பிறப்புகளில் தொடர்ச்சியாகக் கண்டிப்பு முறைகளால் தெய்வத் தன்மையுள்ளவனா யிருக்கிறான். நாய் மாம்சம் தின்பவன் கீழ்ப்பட்ட ஜாதி. அவன் பிராமணனை அணுகினால் பிராமணனுடைய சத்துவகுணத்தில் பெரும் பாகம் நீங்கி அவனுடைய தாமஸ குணம் புகுந்து விடுகிறது. பிராமணன் மீண்டும் பரிசுத்தம் செய்துகொண்டாலொழியத் தாழ்ந்து விடுகிறான். பிராமணனை அணுகியதால் பெற்ற சொற்ப ஸத்வ குணத்தால் புலால் உண்பவனுக்கு அநுகூலமேற்படுவதில்லை. நாய் மாமிசம் சாப்பிடுபவன் ஒரு ஹிந்துவுக்கு இரண்டு பர்லாங்கு தூரத்திற்குள் போகக்கூடாது. புலையர் அரை பர்லாங்கு தூரத்திற்குள் போகக்கூடாது. கர்ம பூமியில் ஞானபூமியைவிடத் தீண்டாமை விதிகள் அதிகக் கண்டிப்பாக அனுஷ்டிக்கப்படுகின்றன. உலக காலத்தோடு ஒப்பிட்டால் நமது வாழ்வு ஒரு நிமிஷம் போலாகும். இங்கு மறைந்து போகக்கூடிய ஒரு வாழ்வில் ஸ்வராஜ்யம் பெறுவதற்காக நாங்கள் நம்மை உயர்த்த ஏற்பட்டுள்ள நிரந்தர விதிகளை மீறமுடியாது. நிரந்தர நன்மைகளுக்கு முரண்படாமல் ஸ்வராஜ்ய முயற்சி எதையும் வரவேற்கிறோம். நிரந்தர அடிமைத்தனத்தை விட ஒருவனிடத்தில் அடிமைத்தனத்தை யேற்போம். ஜாதி ஹிந்துக்களல்லாதவர்கள் தங்களுடைய கர்மாக்களினாலேயே அப்படியானவர்கள். அதன்பலனை அவர்கள் அனுபவித்தாக வேண்டும். கர்மாவின் போக்கை யாரும் மாற்றமுடியாது. புத்திசாலித்தன மிருந்தால் அவர்கள் அமைதியாகக் கடவுளின் விருப்பத்திற்கு உட்பட்டு நடக்கவேண்டியதுதான். ஜாதிமுறை நீக்கப்பட்டால் ஒற்றுமையேற்பட்டுவிடுமென்ற நிச்சயமென்ன விருக்கிறது. ஜாதி ஹிந்துக்களல்லாதவர்களுக்கு இந்த நிர்ப்பந்தங்கள் பிடிக்காவிட்டால் அவர்கள் சொந்தக் கோவில்களைக் கட்டிக்கொண்டு ஜாதி ஹிந்துக்கள் அங்கு வந்தால் நிர்ப்பந்தங்களை ஏன் ஏற்படுத்தக்கூடாது? அவர்கள் உண்மையான ஹிந்துக்களானால் ஹிந்துமதக் கோட்பாடுகளைப் பூரணமாக அனுஷ்டிக்க வேண்டும். சில ஜாதி ஹிந்துக்கள் ஸ்வராஜ்யம் பெறக் கொண்டிருக்கும் அவாவினால் ஜாதி ஹிந்துக்களல்லாதவர்களுடைய கிரமமற்ற அபிலாஷைகளுக்கு உதவியளிக்கின்றனர். அது பெரிய தவறு. இதனால் ஸ்வராஜ்யம் வருவது தாமதப்படும். அடுத்த தலைமுறையில் அவர்கள் கீழ்ஜாதிக்குப் போய்விடுவார்கள். பரசுராமர் தெய்வ அனுக்ரகத்தால் கேரளத்தை யடைந்தார். பிறகு பூராதேசத்தையும் சகுண தெய்வங்களுக்கு அர்ப்பணம் செய்துவிட்டார்.

அவர்களுக்குக் கோவில்கள் கட்டப்பட்டுப் பூஜை முதலியவை நடத்தப்பட்டு வருகின்றன. கோவில்களின் நிர்வாகத்திற்கு ஆங்காங்கு நிலங்கள் விடப்பட்டன. டிரஸ்டிகள் கோவில்களுக்காகவே அந்த நிலங்களை நிர்வகித்து வருகின்றனர். சொந்த உரிமைபொன்றுமில்லை. ஜாதி ஹிந்துக்களுக்குக் கண்டிப்பான நிபந்தனைகளின் பேரில் பிரார்த்தனை உரிமையளிக்கப்பட்டது. ஜாதி ஹிந்துக்களல்லாதவர்கள் பின்னால் வந்தனர். அவர்கள் வெளிப்பிரகாரத்திற்கருகில் வந்தால் கூட அசுத்தமேற்பட்டுவிடும். கோவில்கள் பொது ஜனங்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட நிதியால் கட்டப்படவே யில்லை. ராஜீய விஷயங்களில் சாத்வீக எதிர்ப்புக் கொள்கை சரியாக அனுஷ்டிக்கப்படுகிறது. ஆனால் சமூக மத விஷயங்களில் ஆக்ரமித்து நடப்பது ஸ்வராஜ்ய லக்ஷியத்திற்குத் தீங்காக முடியுமென்று பயப்படுகிறோம். ஸ்வராஜ்ய வாதிகள், ராஜிய விஷயங்களுக்கும் மத விஷயங்களுக்குமிடையில் ஒரு எல்லையை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு கூட இதுவரையில் எங்கள் சமூக மத உணர்ச்சிகளை மதித்து நடந்திருக்கிறது. ஸ்வாரஜ்ய வாதிகள் ஆலயச் சத்தியாக்ரகத்தை அனுமதிக்கு முன் சற்று யோசிக்க வேண்டாமா? சுத்தமான ராஜீய விவகாரங்களுக்கு வெளியில் அவர்கள் தலையிடுவது சரியானதாகாது. தர்மம் சரியாக அனுஷ்டிக்கப்பட்டபோது இந்தியாவை எவரும் வெல்ல முடியவில்லை. தர்மம் குறையவே இந்தியாவும் தனது ஆதிக்கத்தை இழந்துவிட்டது. கோவில்களை அசுத்தம் செய்வது பெரிய அதர்மம். ஆகையால் நீங்கள் தவறான அபிப்பிராயங் கொள்ளாமல் இவற்றையெல்லாம் அறிந்துகொள்ள வேண்டுமென்று தெரிவிக்கிறோம். நாங்கள்கூறியவற்றை காங்கிரஸ் கவனிக்காவிட்டால் நாங்கள் ஒரு சமயத்தில் காங்கிரஸிடம் வைத்திருந்த பூரண நம்பிக்கையை விட்டுவிட வேண்டியதுதான்.

### ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியாரின் பதில்

ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் பொது ஜனங்களின் உபசாரப் பத்திரங்களுக்களித்த பதிலில் இது சம்பந்தமாய்க் கூறிச் சத்தியாக்கிரகத்தை ஆதரித்து உபதேசம் செய்ததின் சாரம் பின்வருமாறு:—நாம் ராஜீய சுயேச்சைக்காகப் போராடிக் கொண்டிருக்கையில் தீண்டாத வகுப்பினர் ஆலயப் பிரவேச விஷயத்தை எழுப்பி நமது பலத்தைப் பிரித்துவிடக் கூடாதென்று கூறப்படுகிறது. ஒரு நிலத்தைப்பற்றிச் சண்டை போடுகிறவர்கள் ஸ்வராஜ்யப் போராட்டம் முடியும் வரையில் அதை ஒத்தி வைத்துவிட்டுக் காத்திருப்பீர்களா என்று நான்கேட்கிறேன். அதற்கு மாறாக நாம் காண்பதென்ன? வக்கீல்கள் தங்கள் தொழிலைத் தீவிரமாக நடத்தி வருகிறார்கள். ஒரு சிறிது நிலத்திற்காக நாம் இப்போது கோர்ட்டுக்குப் போகலாமென்றால் கடவுளின் ஆலயத்திற்குள் அனுமதிக்கப்படாத வகுப்புகள் பூராவும் நாம் ராஜீய சுயேச்சைக்காகப் போராடிக் கொண்டிருக்கையிலும் அந்த உரிமையைக் கேட்பது நியாயமே. கடவுளைப் பிரார்த்திப்பதைவிட நிலம் அல்லது பணத்திற்கு உரிமை மேலானதென்று கருதுகின்றீர்களா? அப்படி நினைத்தால் ஸ்வராஜ்யப் போராட்டம் முடியும் வரையில் கோவில்களைப் பூட்டிவைக்கலாம். உங்களுக்குக் கோவில் அவசியமானால் இதரர்களுக்கும் அது அவசியமாகும். இந்த வேற்றுமைதான் ஸ்வராஜ்யத்திற்குத் தடையாக விருக்கிறது. நாம் இந்தக் கோவிலின் கதவுகளைத் திறந்து விட்டால் அது நிச்சயமாக ஸ்வராஜ்யப் போராட்டத்திற்கு உதவியாகவிருக்கும். நாம் நமக்குள்ளாகப் பிளவுண்டிருப்பது இன்

னும் ஸ்வராஜ்யம் கிடைக்காமலிருப்பதன் காரணங்களுள் ஒன்றாகும். இங்கிலாந்தில் மகாத்மாஜிக்குப் பல வேதனைகளேற்பட்ட போதிலும் டாக்டர் அம்பேத்கர் விடுத்த அம்புதான் மிகுந்த வேதனையை உண்டுபண்ணியது. இங்கிலாந்தில் சர்ச்சில் கோஷ்டிகளைக் கண்டு மகாத்மாஜி பயப்படவில்லை. ஆனால் தேசத்தின் பிரதிநிதி ஹோதாவில் அவர் டாக்டர் அம்பேத்கர் சாட்டிய குற்றங்களை ஒப்புக்கொள்ளவேண்டி யிருந்தது. இந்தியாவில் தீண்டாமையை ஒழிப்பது அங்கீகரிக்கப்பட்ட ஒரு தேசீய திட்டமாகிவிட்டதென்றும், தாமே அதற்கு முதன்மையாக நிற்பதாயும் மகாத்மாஜீ கூறினார். ஆகையால் நாம் இந்தச்சண்டையை ஒத்தி வைத்தால் ஸ்வராஜ்யம் இன்னும் தூரமாகப் போய்விடும்.

நான் கூறுவதைத் தவறாக நினைத்துக் கொள்ளாதீர்கள். நாம் இம்மாதிரி பிளவுபட்டிருக்கையில் பிரிட்டிஷார் நம்மை ஆளப் பாத்தியதை கொண்டாடுவது நியாயமானதென்று நினைத்து விடாதீர்கள். தென் ஆப்பிரிக்கா பூரண சுயேச்சை கேட்டபோது அங்கு சிறுபான்மையோர் பிரச்னை தீண்டாமை முதலியவையெல்லாம் முன்னதாகத் தீர்க்கப்பட வேண்டுமென்று பிரிட்டிஷார் கூறவில்லை. இந்த ராஜீய வாதம் யோக்கியமானதல்ல. அநுமதிக்கப்படக்கூடாதது. ஆனால் நமக்குள் நியாயம், தர்மம் முதலியவற்றை நடத்தி வைத்துக் கொள்ள வேண்டும். ஸ்வராஜ்யப் போராட்டம் நடந்து கொண்டிருப்பதற்காக அநியாயம் செய்துகொண்டிருக்க முடியாது. அதனால்தான் கோவிலைத் திறந்துவிட வேண்டும்.

பலாத்காரமற்ற முறையை நாம் அனுஷ்டித்தாலொழிய பரிகாரம் வியாதியை விடக் கேவலமாகிவிடும். பலாத்காரமாக இந்தக் கோவில் கதவு திறக்கப் பட்டால் அதனால் நன்மை யேற்படாது. மன ஒற்றுமையும் சம்மதமும் ஏற்படவேண்டும். கோவிலின் வாயிலில் உள்ள மரக்கதவு திறக்கப்படவேண்டுமென்று விரும்புவதாக நினைக்காதீர்கள். மேல் ஜாதியினரின் மனது என்ற கதவுதான் திறக்கப்பட வேண்டும். "தீண்டாத வகுப்புச்சகோதரர்கள் அடைப்புகளுக்கு முன் கைகூப்பி நிற்கும் போது தாங்கள் பிரார்த்தனை செய்வதற்குத் தடையாகவுள்ள ஸவர்ண ஹிந்துக்களின் மனது திறக்கப்பட வேண்டுமென்றே பிரார்த்திக்கின்றனர். அந்த மனது இதற்குள்ளாகவே திறந்திருக்கக் கூடும். ஆனால் பயமே தடையாக விருக்கலாம். இதைப்போன்ற புராதன ஸ்தாபனத்தின் வழக்கங்கள் மாற்றப்பட்டால் என்ன நேருமென்று நமக்குத் தெரியாது. நாம் பிரார்த்திப்பதாக நடிக்கும் கடவுளையே நம்பித் தைரியமாகக் கதவுகளைத் திறந்து விடுங்கள். கடவுள் சர்வ வல்லமையுடையவராயும் நல்லவராயுமிருந்தால் நம்மைத் தவறான வழியில் விடமாட்டார். நமது மனச்சாக்ஷிக்குச் சரியென்று தோன்றுவதைச் செய்வோம்; நாம் உண்மையான கடவுளையே பிரார்த்திக்கிறோம். நியாயம் செய்வது நமக்குக் கஷ்டத்தை உண்டு பண்ணாது.

வியாதியை ஒழிக்க விரும்பினால் மருந்து எவ்வளவு கசப்பாக விருந்த போதிலும் அதைச் சாப்பிட்டாகவேண்டும். தாயார் குழந்தையினிடம் அன்பினால் அது வியாதியா யிருக்கும்போது கசப்பான மருந்தைக்கொடுக்காதிருக்கலாம். அது வியாதியை அதிகப்படுத்திக் குழந்தைக்குத் தீங்கையே உண்டுபண்ணும். நமது தீண்டாமை வழக்கம் ஒரு வியாதியே. இப்போதைய நிலைமையே இருந்துவருமாறு கூறுபவர் நான் கூறிய தாயாரைப் போன்றவராவார். ஆனால்

தகப்பனுர் ஸ்தானத்தில் மகாத்மாஜி இப்போது ஹிந்துமதம் வியாதியாகப் படுக்கையிலிருப்பதை உணர்ந்து அதற்குத் தகுந்த மருந்தைக் கொடுக்குமாறு உத்தரவிட்டிருக்கிறுர். தாயாரின் மூட்டாள்தனமான யோசனையைக் கேட்டால் ஹிந்து மதமே ஒழிந்து விடும். தகப்பனுரையோ நல்ல வைத்தியரையோ போல் மகாத்மாஜி கசப்பு மருந்தைக் கொடுக்கிறுர். அதைச் சாப்பிட்டால் ஹிந்து மதம் உயிருடனிருக்கும். ஹிந்து மதம் பெரிய அபாயத்திலிருக்கிறது. அது மரிக்குமாறு விடுவது தேச சேவையாகாது.

தேகத்தில் புண்ணிருந்தால் அதில் ஈக்கள் வந்து உட்காருகின்றன. ஈக்களை வெருட்டத் திட்டிக்கொண்டே யிருப்பதா அல்லது புண்ணையே குணப்படுத்திக் கொண்டுவிடுவது மேலா என்பதில் சந்தேகமிருக்கமுடியாது. ஹிந்து மதம் தீண்டாமையென்ற இந்தப் புண்ணை ஆற்றிக் கொள்ள வேண்டும். ஈக்கள் உட்காராமல் செய்துவிட வேண்டும். புண்களை ஆற்றுமல் வைத்துக்கொண்டு ஈயைத் திட்டுவதில் பலனில்லை.

ஸ்ரீமான் நரிமன் தீண்டாமை ஒரு ராஜீய விஷயமென்றும் ஆகவே ஹிந்துக்களல்லாதவர்களும் அதில் தலையிட உரிமையுண்டென்றும் கூறினுர். நான் சற்று மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கிறேன். புண் என்னுடையது. அது என் சர்மத்திலிருக்கிறது. ஆகவே உண்மையான நண்பர் முறையில் ஸ்ரீமான் நரிமன் அதற்கு வருந்துகிறுர். ஆயினும் என்னுடைய ரத்தம் தான் கொதித்து இந்தப் புண்ணை சீக்கிரத்தில் ஒழிப்பதற்காக ஒரு சிரங்கைக் கிளப்பி விடுகிறது. என்னிடமிருந்து அவருக்கும் அது பரவலாமென்பது வாஸ்தவம். கிறிஸ்தவர்களும் முஸ்லீம்களும் தீண்டாமையை அனுஷ்டிப்பதை நாம்பார்க்கவில்லையா; பார்விகளும் நம்மைப்பார்த்துத் தீண்டாமையை அனுஷ்டிக்கவாரம்பிக்கலாம். ஆனுல் எல்லாவற்றிற்கும் மேலாக அவர் இதில் அதிக உணர்ச்சி கொண்டிருப்பதற்கு முக்கிய காரணமொன்று இருக்கிறது. அவரும் நாமும் எல்லாரும் ஒரே படகிலிருப்பதால் வியாதியஸ்தன் காரணமாக எல்லாரும் மூழ்கிவிடுவோமென்று அவர் நினைக்கலாம். ஆங்கிலேயர்கள், நமது தகுதியின்மைக்கு ருஜுவாக இதைக் கூறிவருவதால் நாமெல்லாம் சேர்ந்தாப் போல் யாத்திரை செய்து கரைசேருவதற்காக அவர் நமக்குச் சேவை செய்ய விரும்புகிறுர். அதனுல்தான் இது ராஜீய விஷயமென்று ஸ்ரீமான் நரிமன் கூறினுர். எனக்கும் இதர ஹிந்துக்களுக்கும் இது சரீர வலியும் நியாயத்தைப் பொருத்த விஷயமுமாகும். ராஜீய சம்பந்தமிருந்தாலும் இல்லாவிடினும் புண் ஆற்றப்பட வேண்டும்.

இந்த ஸத்யாக்ரஹத்தைச் சாத்தியமான ஒவ்வொரு வழியிலும் ஆதரிப்பது உங்கள் புனிதக் கடமை. பலாத்காரமின்றி நடப்பதாகப் பிரதிக்ஞை கொள்ளுங்கள். மனதைப் பலாத்காரமற்றதாக வைத்திருப்பதே அதற்கு வழி. உங்களை எதிர்ப்பவர்களுக்குத் தீங்கிழைக்க மனதால் நினைத்தாலும் உங்கள் போராட்டம் கெட்டுப்போகும். அப்படிப்பட்ட யோசனை உங்கள் மனதில் தோன்றியதும் மகாத்மாஜியை நினைத்துக் கொண்டு தூண்டுதலிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். நமக்கு வேண்டியதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். நமது எதிரிகளின் ஹிருதயங்களைத் திறக்கவே விரும்புகிறோம். அவர்களை ஒடுக்கவோ பயமுறுத்தவோ விரும்பவில்லை. அவர்கள் நம்மைத் திட்டலாம், கற்களை எறியலாம், நம்மைக் கேவலப்படுத்திப் பேசலாம். ஆனுல் நாம்

அவற்றை பொருட்படுக்தக் கூடாது. பலாத்கார மேற்பட்டால் நமது இயக்கத்தை நிறுத்தவேண்டியிருக்கும். ஆகையால் நீங்கள் பணத்தையும் அன்பையும் உபசாரத்தையும் அளிப்பது மாத்திரம் போதாது. மகாத்மாஜி விரும்புகிற அளவிற்கு பரிசுத்தமாயுமிருக்கவேண்டும். மனிதர்கள் போதாமல் இயக்கம் நிற்குமாறு விட்டுவிடாதீர்கள். மத பக்தியுள்ளவர்களைத் தொண்டர்களாகப் பயிற்சி செய்விக்க வேண்டும். ஸத்தியாக்கிரகிகள் கடவுளைப்பார்க்க மிகுந்த ஆர்வம் கொண்டால்தான் கோவில்களின் கதவுகள் திறக்கப்படும்.

## பிரமாவுக்குச் சங்கடமா?



சரஸ்வதிக்கு நாமகள் என்று ஒரு பெயருண்டு என்பது உங்களுக்குத் தெரியும். சரஸ்வதிக்குப் பிரமாவின் நாக்கு இருப்பிடமானால் இந்தப் படத்தில் கண்டபடி தானே இருக்கவேண்டும்? இல்லையானால் வேறு என்ன பொருள் கூறுவீர்கள்? சற்றே மூளைக்கு வேலை கொடுத்து உண்மை காண முயல்வீர்களாக.

———:(o):———

## "கட்செவி"

'கட்செவி' யெனும் இம்மொழிக்குப் பண்டையோர், 'பாம்பு' தன் கண்ணாற் காணுந் தூரம் கேட்கும் இயல்புடைய 'செவியை' யுடைய தென்று பொருள் கொண்டார்போலும்.

அம்மொழிக்கு இக்காலத்தவருள் பாம்பிற்குச் செவி யென்று தனியே ஒருறுப்பில்லை; கண்ணையே செவியாக வுடையதாதலின் 'கட்செவி' யென்பது 'பாம்பைக்' குறிப்பதாயிற்றென்பாருமுளர். இஃதைக் கண்ணுறும் 'பேரறிஞர்கள்' உண்மை யுணர்ந்து எது பொருத்த மென்பதை அறிவிப்பார்களாயின் எம்போலியர்க்கு எத்துணைப் பயனளிக்கும்? S. R. அத்தியப்பன்.

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

வெளிச்சம்! வெளிச்சம்! வெளிச்சம்! வெளிச்சத்திற்காகவே நாம் படும்பாடு! இருள் ஒழிந்தது. விளக்குப் புகுந்தது! தரித்திரம் ஒழிந்தது! ஐஸ்வரியம் நிலைத்தது! அஞ்ஞானம் தொலைந்தது! ஞானம் பரவியது! நீங்கிற்று அசுத்தம்! குடிகொண்டது சுத்தம்! இம் மாதிரி வசனங்களே காதிற் கேட்டன. என் அறையைவிட்டு வெளியே நோக்கினேன். வீதியில் அனேக ஜனங்கள் ஜயக்கொடிகளைத் தூக்கிக் கொண்டு ஆரவாரித்துக்கொண்டு சென்றனர். வீதி யெல்லாம் ஒரே ஜோதி மயமா யிருந்தது. மின்சார விளக்குகள் அங்கங்கே பிரகாசித்துக் கொண்டிருந்தன. என்ன செய்தியென்று தெரிந்துகொள்ள, வீதியில் சென்று கூட்டத்தோடு கலந்து கொண்டேன். நமது தேசம் மேன்மை யடைந்து விட்டது. பல துறைகளிலும் நமது தாய்நாடு கௌரவமடைந்து விட்டது. அதைக் கொண்டாட இந்தத் திருவிழா நடைபெறுகிறது என்று தெரிய வந்தது. என் கண்களில் நீர்ததும்பிற்று. ஆனந்தபாஷ்பம் சொரிந்தது. "ஈசா! என்னுடைய தேசத்தை மேன்மையாக்க இன்றாவது உனக்கு மனம் வந்ததே" என்று கடவுளைப் பிரார்த்தித்தேன். பின் கூட்டத்தினின்றும் பிரிந்து நகரத்தின் ஒவ்வோர் மூலைக்கும் சென்று என்ன நடக்கிறதென்று பார்க்கலானேன்.

முதலில் மனம் அமைதியடைய கடற்கரையை நோக்கிச் சென்றேன். அனேக கப்பல்கள் நமது தாயின் மணிக்கொடியைப் பறக்கவிட்டுக்கொண்டு திரிந்தன. 'இக்கப்பல்கள் யாருடையவை?' என்று அங்கிருந்த ஒருவரைக் கேட்டேன். அவர் வியப்புற்றார். "இதென்ன! உமக்குத் தெரியாதா? நமது கப்பல்கள்தாம் இவை" "நமது கப்பல்களா! நமக்கு ஏது?" அவர் என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "நீர் பத்திரிகைகளைப் படிப்பதில்லையோ, விஷயங்களைக் கவனிப்பதில்லையோ? நமது தேசத்தார் இப்போது ஐம்பது புதிய கப்பல்கள் செய்திருக்கிறார்கள். வெளிநாடுகளுக்கு நமது சாமான்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஐம்பது கப்பல்கள் வேண்டி யிருந்தன. இரண்டு வருஷங்களில் செய்து முடித்து விட்டனர். இன்னும் சில மாதங்களில் ஐம்பது புதிய கப்பல்கள் கட்டப் போகிறார்கள். வியாபாரிகள் ஒன்றுகூடி கப்பல்கள் செய்யப்போன தொகைகளைக் கொடுத்து வருகிறார்கள்.

விர்ர்ர்ர்! ஆகாயத்தில் விமானங்கள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. "அவ்விமானங்களும் நம்முடையவை தானோ?" என்றேன். "தடையில்லாமல் நமது தேசத்திலேயே நமது பணத்தைக்கொண்டே, நமது எஞ்சினியர்களைக் கொண்டே செய்யப்பட்டவை. நமது ஆட்களே ஓட்டுகிறார்கள்." எனக்கு வியப்பும் சந்தோஷமும் உண்டாயின.

சிறிது நேரத்தில் கடற்கரையைவிட்டு ஊருக்குள் வரும்போது, ஒரு ரேடியே கருவியைச்சுற்றி ஜனங்கள் நின்றிருப்பதைக் கண்டேன். என்ன பேசுகிறார்கள் பார்க்கலாம் என்று அங்கே சற்றுத் தங்கினேன். "அன்பர்களே! ரேடியோவைக் கண்டுபிடித்த மஹானின் பெயர் நீடூழிகாலம் வாழவேண்டும். இக்கருவி இப்போது தேசத்தின் ஒவ்வொரு கிராமத்திலும் பரவி விட்டதென நீங்கள் அறிந்திருப்பீர்கள். பத்திரிகைகள் வாசிக்க அவகாசமில்லாதவருடைய சௌகரியத்திற்காக வர்த்தமானங்களை இக்கருவி மூலமாய் வெளியிடுகிறோம். காலையில் மூன்றுமணி நேரமும், மாலையில் ஐந்து மணிநேரமும் இங்கே பல விஷயங்களைப்பற்றிப் பேசப்படும். ஒருமணி நேரம் சுகாதாரம், ஒருமணிநேரம் வெளியூர்வர்த்தமானம், ஒருமணிநேரம் உள்ளூர்வர்த்தமானம், ஒருமணிநேரம் மதம், ஒருமணிநேரம் ரஸாயனசாஸ்திரம், ஒருமணிநேரம் இலக்கியம், ஒருமணிநேரம் சங்கீதம், ஒருமணிநேரம் ஹாஸ்யம் இப்படி நடக்கும். அடிக்கடி சமூக சீர்திருத்தங்களைப்பற்றி உபன்னியாசங்கள் நடைபெறும். நமது தேசம் இவ்வளவு முன்னேற்ற மடைந்ததற்குக் காரணம் மஹா ஜனங்களே நீங்கள் ஒருமனப்பட்டு, சண்டை சச்சரவுகளை ஒழித்து முன்னேற்றத்திற்குப் பாடுபடாவிடின், எப்படி பலதுறைகளில் நன்மை யுண்டாகியிருக்கும்? உங்களிடம் மிச்சமாயிருக்கும் பணத்தை தேசத்தின் நிதிகளில் சேர்த்து, வியாபாரத்திற்கும் மற்றுமுள்ள காரியங்களுக்கு உதவியதுடன், ஒவ்வொருவரும் சர்வ சம்மதத்துடன் மாதம் இவ்வளவென்று கஷ்டமோ சுகமோ கொடுத்து வருவதாலல்லவோ இவ்வளவு சீக்கிரத்தில் மேன்மை பெற்று விட்டோம். எவ்வளவு கீழான நிலையிலிருந்தது நமது பாரதநாடு! நூற்றுக்குத் தொண்ணூற்று ஐந்துபேர் ஏழைகளா யிருந்தனர் சில வருஷங்களுக்கு முன்! முன்னொரு காலத்தில் எவ்வளவுக் கெவ்வளவு செல்வ மிருந்ததோ அவ்வளவுக் கவ்வளவு தரித்திரம் குடி கொண்டிருந்தது. தலை யெடுக்க முடியாதென்றே நினைத்திருந்தோம். ஆனால் ஜனங்களுக்குப் புதிய உணர்ச்சியும் நல்லயோசனையும் உண்டாயின. மேனாட்டுத் தேசங்கள் என் கஷ்டமின்றி ஜீவிப்பதோடு செல்வம் மிகுந்திருக்கின்றன? ஜப்பான் அவ்வளவு சிறிய தேசமாயினும் ஏன் மேனாட்டு தேசங்களைச் சட்டை செய்யாமல் அவைகளுக்குச் சரி சமானமாக அவைகளுடைய விசேஷ சபைகளில் முக்கிய அங்கங்களில் ஒன்றாக விருக்கிறது? சீனதேசம் நேற்று வரையில் அபினியை மென்று தூங்கி விழுந்தது போகத் தற்காலம் தீவிர முயற்சி செய்து வரக் காரணமென்ன? இவைகளையே யோசித்துப் பணம் எப்படியாவது சேர்த்து விட்டால், அப்பணத்தை வைத்துக்கொண்டு பல சீர்திருத்தங்கள் செய்து விடலாம். ஆனால் பணம் சேர்ப்பதற்குச் சுலபமான வழியென்ன? மேனாட்டார் எப்படிப் பணநிதிகள் சேர்க்கிறார்கள்? முக்கியமாய் இன்ஷியூரென்ஸ் என்னும் திவ்ய முறையையே கைக்கொண்டிருக்கின்றனர். அங்கு இன்ஷியூர் செய்யாத நபர்களே வெகு சிலர். ஏனெனின் இம்முறை யொன்றிலேயே வலுக்கட்டாயமாகப் பணம் சேர்க்க முடியும். வேறு வழிகளில் செய்தால், பணத்தை வசூல் செய்து விடலாம் என்று தெரிந்து கொண்டனர். இன்ஷியூர் செய்தால் சீக்கிரத்தில் மரணம் அடைகிறார்கள் என்னும் மூட அபிப்பிராயத்தை அடியோடு ஒழித்தனர். ஒரு குடும்பமும்,

---

இரக்கம் காட்டும் சந்தர்ப்ப தினுசுகளின் தொகையின் அளவே, ஆன்மாவின் பெருந்தன்மை யாகும்.

தலைவன் இறந்துவிட்ட காரணத்தால் அனாதையாகாமல் பாதுகாத்தனர். ஆகவே, இருக்கும் ஏழைகள் போக, புதிதாக ஏழையானவர்கள் கிடையாது. நிதிகளும் பெருகிக்கொண்டு வந்தன. பணம் நிறையச் சேரவே, வியாபாரத்திற்குத் தைரியமாய்ச் செலவழிக்க முடிந்தது. பெரிய தொழிற்சாலைகள் நாடெல்லாம் தோன்றின. எல்லோருக்கும் வேலைகள் கிடைத்தன. நிலங்களை உழுது சாகுபடி செய்யப் புதிய முறைகளைக் கைக்கொண்டனர். ஜனங்கள் நமது தேசத்தின் வஸ்துக்களையே வாங்குவதை விரதமாகக் கொண்டு விட்டனர். அன்னிய தேசங்களிலும் நமது சாமான்கள் தேவையென்று தெரிந்தது. நல்ல லாபம் கிடைத்தது. அந்த லாபத்தைச் சிலர் பங்கிட்டுக் கொள்ளாமல் அங்கங்கே பள்ளிக்கூடங்களும், ஆஸ்பத்திரிகளும் பல பல தொழிற்சாலைகளும் ஏற்படுத்தினர். ஜனங்களுக்குக் கூடியமட்டில் இலவச வைத்தியமும் இலவசக்கல்வியும் கொடுக்கத் தீர்மானமாயிற்று, மாணவர்கள் ஊக்கத்தோடு படிக்கத் தொடங்கினர். அஞ்ஞானப் பேயை ஓட்டினர். ஞானக்கொடியை நாட்டினர். கல்வி பரவவே கீழான நிலைமையை உதறித் தள்ளினர். ஒருவரோடொருவர் மனஸ்தாபப்படுவது தவறென்று அறிந்தனர். ஒருவரோடொருவர் சிநேகம் பாராட்டினர். ஜாதிமதங்களைத் தள்ளினர். இந்தியர் என்ற பொதுப்பெயரில் எல்லோரும் மகிழ்ந்தனர். இதற்கெல்லாம் காரணம் யாது? இன்ஷியூரென்ஸ் நிதிதான் அன்பர்களே! இப்போது மேன்மையடைந்து விட்டதால் இன்ஷியூரென்ஸை நிராஹரிக்காதீர்கள். அதை மேன் மேலும் அனுசரித்து நாட்டிற்கும் உங்களுக்கும் விசேஷ பலனைத் தருவித்துக் கொள்ளுங்கள்.''

நான் இவ்விடத்தைவிட்டு ஊருக்குள் சென்றேன். வீதிகள் விசாலமாயிருந்தன. கட்டடங்கள் பெரிதாகவும் வசதிகளோடும் கட்டியிருந்தன. வீதிகளில் அழகான வண்டிகள் போய்க் கொண்டிருந்தன. ஜனங்கள் நல்ல உடைகள் தரித்துக்கொண்டு உலாவிக் கொண்டிருந்தனர். எல்லோர் முகத்திலும் களிப்பே குடி கொண்டிருந்தது. வயது சென்றவர்களின் முகங்களில் நன்றி தோன்றிற்று. 'இத்திவ்யகாலத்தில் ஜீவித்திருக்கக் கொடுத்து வைத்தோமே' யென்பது போலும் நடு வயதுக்காரர் முகங்களில் சந்தோஷமே குடி கொண்டிருந்தது. "நம்முடைய முயற்சிகளா லல்லவா இவ்வளவும்'' என்பது போலும் வாலிபர் முகங்களில் ஊக்கம் தோன்றிற்று. ''இதைவிட இன்னும் மேன்மையாக்கவேண்டும். நமது தாய்நாடு உலகத்திற்கோர் அணிகலமாக வேண்டுமென்பது அவர்களுடைய ஆசையென்று தோன்றிற்று, இத்திவ்ய தோற்றங்களைக் கண்ணுறுமாறு வானத்தில் வெண்ணிலா விளங்கியது. ஆயினும் மேலேயிருந்த வெளிச்சத்தைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாக விருந்தன தெருவிளக்குகள். குக்கிராமங்களிலும் இவ்விளக்குகள் சாதாரணமாக வழங்க ஆரம்பித்து விட்டனவாம்! இத்தனை மேன்மை யடைந்தபின், எங்கே கடவுள் மேலிருக்கும் பக்தி போய் விடுமோ வென்று அச்சந் தோன்றிற்று. ஆனால் சிறிது தூரம் சென்றவுடன் ஓராலயம் புலப்பட்டது. ஜனங்கள் உள்ளே போவதையும் வருவதையும் கண்டு, இம்மேன்மைகள் கடவுளின் மேன்மையை எடுத்துக் காட்டுகின்றன

---

**"இரக்கம்," "நீதி" இரண்டும் சிறுமொழிகள். ஆனால் அவைகளை அனுஷ்டானத்திற்குமட்டும் கொண்டுவந்து விட்டால், அறநெறி விஷயங்கள் அனைத்தும் அவற்றுள் அடங்கி விடும்.**

வல்லவோ. ஆகையால் அவரைப் பின்னும் அதிகமாகத் துதிக்க ஆரம்பித்திருக்கிறார்கள் போலும் என்று ஊகித்தேன்.

அடுத்த வீதியை யடைந்தேன். அங்கே பெரியதோர் மாளிகை தோன்றிற்று. அது முழுவதும் மின்சார விளக்குகள் மயமாய் இருந்தது. ஜனங்களும் அதைச் சுற்றி நின்று புகழ்ந்து கொண்டிருந்தனர். என்னவென்று நெருங்கிப் பார்த்தேன். விளக்குகளாலேயே பின்வருமாறு பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது. "இந்தியாவின் ஆதாரம்! ஏழைகளுக்குத் தோழன்! ஆபத்தில் நண்பன்!" என்று எழுதியிருந்தது. என் அருகில் நின்றிருந்த சிறுவன் தன் பாட்டனாரை நோக்கி "தாத்தா! அது என்ன அர்த்தம்?" என்று கேட்டான். அவர் "அதுதான் அப்பா! எனக்கும் பாட்டிக்கும் சாப்பாடு போடுவது. அதுதான் அப்பா! நம்மெல்லோரையும் பாதுகாப்பது, அதுதான் அப்பா! ஆபத்தில் உதவுவது, அனாதைகளை ஆதரிப்பது, வியாபாரத்தை நிலை நிறுத்துவதும் அதுவே. உனக்குக் கல்வி கற்பிப்பதும் அதுவே. அதுதான் சர்வ வல்லமையுள்ள சர்வ நன்மையைப் பயக்கும் இன்ஷியூரென்ஸ் கம்பெனி. அதை என்றைக்கும் மறவாதே" என்றார்.

நான் இதைக் கேட்டுக்கொண்டே திரும்பினேன். எதிரே ஒரு மோட்டார் வண்டியின் ஒளியைக்கண்டு சற்றுத் திரும்பினேன்.

கண் விழித்துப் பார்த்தேன். சூரியனின் காலைக்கிரணங்கள் முகத்தில் பட்டு என்னை எழுப்பின. அந்தோ! நான் கண்டது கனவேயோ! நமது தாய் நாட்டிற்கு இன்னும் நற்காலம் பிறக்கவில்லையே, என்று மனம் நொந்தேன். பின்னர். "கனவாயின் என்? நமது தேசத்தார் மனம் வைத்தால் ஏன் உண்மையாகக் கூடாது? என்று தோன்றிற்று. ஆம், அப்படித்தான் ஆகும். நமது மக்களுக்கு இந்த தரித்திரதசை ஒழிய வேண்டுமென்னும் உணர்ச்சி வந்துவிட்டது? மேன்மை அடைய வேண்டுமென்று தாகம் உண்டாய் விட்டது! இனிமேல் அவர்கள் எழுந்திருந்து விட்டார்கள்! விழித்துக் கொண்டு விட்டார்கள்! தம்முடைய எண்ணம் நிறைவேறும் வரையில் நிற்க மாட்டார்கள்! "உத்திஷ்ட, ஜாக்ரத, பிராப்ய வரான் நிபோத" என்னும் மஹா வாக்கியம் அவர்களுக்குப் பகலில் மேகமாகவும், இரவில் அக்னியாகவும் இஸ்ரவேல் மரபினரை பாலஸ்தீனுக்குக் கடவுள் அழைத்துச் சென்றதுபோல் செல்கின்றது. அன்பர்களே! போவோம் வாருங்கள். என் கனவை மெய்ப்பிக்கலாம்!

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

---

நான் "ஒருவன் என்ன நினைத்தான்" என்று அறிய விரும்புகிறேனேயன்றி "அவன் என்ன நினைத்திருக்கவேண்டும்" என்று பிறனொருவன் கூறுவதைக் கேட்க விரும்பவில்லை.

# அன்பு.

(டர்பன், சரஸ்வதி சபைத்தலைவர்.
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

அன்புஞ் சிவமுமிரண் டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தி யாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தி யாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருந்தாரே.

என்னும் திருமூலர் திருவாக்கை ஆதாரவாகக் கொண்டு அன்பு என்னும் விஷயத்தை எஞ்சிற்றறிவிற் கெட்டியவாறு எழுதத் துணிகின்றேன். மேற்கண்ட திருவாக்கில் வரும் அன்பு, சிவம் என்னும் இரு பதங்களில், முதலில் அன்பு என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்ந்து பின் சிவத்தின் இலக்கணத்தையும் ஒருவாறு தேர்ந்து, இரண்டிற்குமுள்ள இயைபினைப் புலப்படுத்திக் காட்டல் வேண்டுமென்பதே இக்கட்டுரையின் முக்கிய நோக்கம்.

"அன்பெனப்பட்டது தான் வேண்டப்பட்ட பொருளின்கட் டோன்றும் உள்ள நிகழ்ச்சி" என்று ஆசிரியர் நக்கீரனார் இறையனாரகப்பொருள் முதல் சூத்திரத்தில் கூறியிருக்கின்றார். ஆசிரியர் அன்பிற்கு இவ்வாறு இலக்கணங் கூறவே, அன் பென்பது தான் கருதப்பட்ட பொருளின்கட் டோன்றும் வேட்கை யென்பதும், அதுவே ஈண்டு அன்பென்று விகற்பிக்கப்படா நின்ற தென்பதும் நோக்கற்பாலன. உலகத்துள்ள பொருளெல்லாம் இரண்டு வகையான் உணர்த்தப்படும். பொருளின் உண்மையை மட்டும் உணர்த்தி, அப்பொருளின் உருவ இலக்கணம் உணர்த்தப்படாதிருத்தல் ஒரு விதம், பொருளின் உண்மையும், உருவ இலக்கணமும் ஒருங்குணர்த்துவது மற்றொரு விதம். இவ்விரு வகையினுள் அன்பு எதன்பாற் படுமோ வெனின், ஆசிரியர் நக்கீரனார் கூறுவதுபோல் 'உண்மை மாத்திர முணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதன' வாகிய பொருள்களின்கட் படும். அதாவது நெஞ்சத் துணர்வினிற்கு மட்டும் புலப்பட்டு அனுபவிக்கப்படுவதாயும், அவ்வனுபவம் இத்தகையதாயிருந்ததென எவ்வாற்றானும் பிறருக்குப் புலப்படத் தோன்றக் கூறப்படுவ தன்றாயு முள்ளது.

அன்பென்பது இவ்விலக்கண முடையது என்று சுட்டிக் காட்ட எலாமையானன்றோ. "அன்பென்பது குடத்துள் விளக்குந் தடற்றுள் வாளும் போல இது காண் அன்பென்று தந்து காட்டலாகாது." என்று இறையனாரகப்பொருள் உரையாசிரியரும் கூறிப்போந்தார். ஆகவே பயன் சிறிதுங் கருதாது ஓர் ஆன்மாவிற்குப் பிறிதொரு பொருண் மேலுண்டாம் வேட்கையாலேற்படும் உள்ள நெகிழ்ச்சியே அன்பு என்று சொல்லப்படும் என்பதும், அவ்வன்பும் உண்மை மாத்திரம் உணரப்படுவதாய்ப் பிழம்புணரப்படுவ தன்றாயதோர் பொருளா மென்பதும் ஈண்டுக் காட்டப்பட்டன.

இனி ஆன்மாவிற்கு அநுபவ மாத்திரையாயுள்ள, உள்ள நெகிழ்ச்சியாகிய அன்பு ஆன்மாவினிடத்து இயற்கையாக உள்ளதா, அல்லது செயற்கையால் இடையே வந்து சேர்ந்ததாவென்று ஆராயவேண்டும். அன்பு என்பது ஒரு குணப் பொருளே யன்றி குணிப் பொருளல்ல. குணம் யாண்டும் தனித்து நில்லாமல் ஓர் குணிப் பொருளைப் பற்றிக் கொண்டே நிகழுமாகலான், அது ஆன்மாக்களிடம் இயற்கையே அமைந்து கிடப்பது; ஆகவே ஆன்மாக்களின் அறிவு விரிந்து திகழும்போதெல்லாம் அன்பும் உடன் நிகழுமென்றறிக. ஆனால் அன்பு ஆன்மாவிற்கு இயற்கையாகவே யுள்ள குணமாயின் அவ்வன்பு எப்போதும் புலப்படாதிருக்கின்றதே, அதற்குக் காரணம் யாது என்று சிலர் வினவலாம். காந்தத்திற்கு இரும்பூசியை இழுக்கும் சக்தி இயற்கையாக இருப்பினும், இரும்பூசியைக் காணுவிடத்து அச்சக்தி புலப்பட்டுத் தோன்றுவதில்லை. இதனால் காந்தக் கல்லிற்கு ஆக்ருஷண சக்தியில்லை யென்றே முடிவு கோடல் நியாயமா? ஆகாது. மற்றென்ன வெனின், காந்தக் கல்லில் இயற்கையாகவே இருப்பதும், ஆனால் மறைந்து கிடப்பதும் (Latent) ஆகிய ஆக்ருஷண சக்தியானது இரும்பைக் கண்டவிடத்து வெளிப்பட்டுத் தோன்றுகிற (manifest) தென்பதே உண்மையாம். அது போலவே ஆன்மாவினிடத்துக் கரந்து நிற்கும் அன்பானது தான் வெளிப்பட்டுத் தோன்றுதற்குரிய சாதனங் கிடைத்த அளவானே வெளிப்பட்டுத் தோன்றும் இயல்புடையது. ஆதலால் ஓரான்மாவின் கண் எப்போதும் புலப்படாதது கொண்டே அன்பென்பது ஆன்மாவிற்கு இயற்கையேயுள்ள குணமன்றெனக் கூறுதல் பொருந்தா தென்பதும், மற்று அது ஆன்மாவிற்கு இயற்கையாகவே உள்ளதோர் குணமாம் என்பதும் கரதலாமலகம் போற் காட்டப்பட்டன.

இனி, இவ்வன்பைப் புலப்படத் தோற்றுவிப்பது யாதெனின்:—அன்பே அன்பைத் தோற்றுவிக்கும். பச்சை விறகைத் தீயிலிட்டால் அவ்விறகு தீப் பிடித்து எரியக் காண்கிலேம். இதற்குக் காரணமென்னை? பச்சை விறகிலிருக்கும் ஈரமும், தீயிலிருக்கும் வெம்மையும் தம்முள் பெரிதும் மாறுபட்ட சுபாவ முடையனவாயிருத்தலால் அவை யிரண்டும் ஒன்றோடு ஒன்று சேருவதில்லை; சேரா தொழியவே விறகும் எரிவதில்லை. மற்றுக் காய்ந்த விறகையும், தீயையும் ஒன்று சேர்த்தால் உடனே அவ்விறகு கொழுந்துவிட் டெரியக் காண்கின்றேம். இதற்குக் காரணம் என்னை? காய்ந்த விறகில் இயற்கையே அமைந்து கிடக்கும் சூடும், நெருப்பின் உஷ்ணமும், தம்முள் ஒத்த குணமுடையவாதலால் இரண்டும் ஒன்று சேர்ந்து எரிகிறது. இதுபற்றியே 'ஒத்த குணமுடையன தம்முள் ஒன்று சேருமென்றும், மாறுபட்ட குணமுடையன தம்முள் பிரிந்து நிற்குமென்றும்' (Like things attract each other, unlike things repel each other) ஆங்கில பூத பௌதீக சாத்திரிகள் வரையறுத் துரைப்பாராயினர். மானையும் மானையும் ஒன்று சேர்த்து வைத்தால் அவை யிரண்டும் தம்முள் ஒன்றுபடும். புலியையும் மானையும் ஒன்று சேர்த்துவைத்தால் அவை இரண்டும் தம்முள் ஒற்றுமை யுறுமோ? உறா. என்? இரண்டும் ஒன்றனுக்கொன்று மாறுபட்ட சுபாவமுடையனவாகலானென்க. அதுபோலவே அன்பும் அன்பும் தம்முள் ஒன்றுபடுமாகலான், அன்பே அன்பை தோற்றுவிக்கு மென்க. எம்முடனே உண்மையன்பு பாராட்டும் எமதரிய நேசரைக் கண்டவிடத்து எமக்கு அன்புண்டாதலும், எம்மை வெறுக்கும் எமது பகைவரைக் கண்டவிடத்து எமக்கு வெறுப்

புண்டாதலும் பிரத்தியட்சமாக அறியப்படும் உண்மையாகலான், அன்பே அன்பைத் தோற்றுவிக்கு மென்பதற்கு வேறு பிரமாணங்கள் வேண்டா வென்க.

எல்லா உலகங்களையும், எல்லா அண்டங்களையும் தன் வியாபகத்தின் கண் அடக்கிக்கொண்டு அவைகளிலெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கின்ற ஒரு சக்தியுண்டு. இந்தச் சக்தியைத்தான் ஆங்கில பௌதிக சாத்திரிகள் மின் சார சக்தி (Electricity.) என்று கூறுகிறார்கள். இந்தச் சக்தியை நம்முடைய சைவ சித்தாந்திகள் அருட் சக்தி என்றுரைப்பர். இந்த மின்சார சக்தியானது உடன்பாட்டு மின்சாரம் (Positive Electricity) எதிர் மறை மின்சாரம் (Negative Electricity) என இருவகைப்படும். இவ்விருவகையும் கலந்து நிற்கும்போது இந்தச் சக்தி ஒரு தொழிலையும் செய்யாது; சக்தியும் புலப்பட்டுத் தோன்றாது. உடன்பாட்டு மின்சாரத்தையும், எதிர்மறை மின்சாரத்தையும் தனித் தனியாகப் பிரித்தால் அப்போது இச்சக்தியின் ஆற்றல் புலப்பட்டுத் தோன்றும். நாம் இவ்விரண்டையும் தனித்தனியாகப் பிரித்து விட்டோமாயினும் அவைகள் மறுபடியும் ஐக்கிய முறுவதற்கே முயற்சி செய்யும். இம்மாதிரியாக ஏற்படும் முயற்சியும், அதற்குரிய ஊக்கமும் சடப்பொருள்களிடத்துக் காணப்படும்போது அச்சக்தியை ஆகருஷண சக்தி யென்றும், சித்துப் பொருள்களிடத்துக் காணப்படும்போது பிராண சக்தி யென்றும் நாம் வழங்குகின்றோம்.

இந்தச் சக்தி இறைவனுடைய அருட் குணமாகும். இதுபற்றியே 'அருளுண்டா மீசற்கது சத்தியன்றே' என்னும் ஆன்றோர் திருவாக்குமெழுந்தது. திருவிளையாடற் புராணமுடையார் "சக்தியாய்ச் சிவமாகி" என்றதும் இக்கருத்தே பற்றி என்க. இறைவன் வேறு சக்தி வேறு என்று இதனால் கருதக்கூடாது. இறைவனை விட்டுச் சக்தியும், சக்தியை விட்டுச் சிவமும், பிரியா வென்க. அதாவது இறைவனாகிய சிவத்திற்கும், அவனதருளாகிய சக்திக்குமுள்ள சம்பந்தம் தாதான்மிய சம்பந்தமாகும். தாதான்மிய சம்பந்தமாவது எக்காலத்தும் எவ்வாற்றானும் பிரிக்கமுடியாத சம்பந்தம். அஃதெவ்வாறெனின்:—நீரின் தண்மையையும், நெருப்பின் வெம்மையையும் பிரித்து நீரை வேறாகவும், அதன்கண் அமைந்திருக்கும் தண்மையை வேறாகவும், நெருப்பை வேறாகவும், அதன் வெம்மைக் குணத்தை வேறாகவும் ஆக்குதல் முடியாதன்றோ? அது போன்ற சம்பந்தமுடையது தாதான்மிய சம்பந்தம். மற்று ஒரு பொருளுக்கும், மற்றொரு பொருளுக்குமுள்ள சம்பந்தம் சையோக சம்பந்தம் எனப்படும். இறைவன் உலகோடும், உயிரோடும் தாதான்மிய சம்பந்தப்பட்டிருக்கிறார் என்பதற்குப் பிரமாணம்:

> "காவினில் ஊறும், கரும் பினிற் கட்டியும்,
> பாவினுள் நெய்யும், பழத்துள் இரதமும்,
> பூவினுள் நாற்றமும், போலுளன் எம்மிறை
> காவலன் எங்கும் கலந்து நின்றானே."—என்று,

சிவஞான சிரேட்டராகிய திருமூலவடிகள் அருளிச் செய்ததே போதியதா மென்க. இதுபோலவே ஆன்மாவிற்கும், அன்பிற்குமுள்ள சம்பந்தமும், தாதான்மிய சம்பந்தமாகும். ஆகவே, அன்பு ஆன்மாவிற்குரிய இயற்கைக் குணமென்பதும், அதை ஆன்மாவினின்றும் பிரிக்க முடியாதென்பதும் பெறப்பட்டன.

ஆன்மாவிற்கு அன்பு, இயற்கையாகவே உள்ளதெனின் அநேகர் அன்பின்றி பொறாமை, கோபம், தன்னலங்கருதல் முதலிய இழி குணத்தர்களாயிருக்கக் காண்கின்றோமே அதற்குக் காரணம் என்னையெனில், கூறுதும். ஆன்மாவின் அறிவை அறியாமையென்னும் ஓர் குணம் மறைத்துக்கொண்டிருக்கிறது. அறியாமைக் குணம் ஆணவமலத்திற்கிருப்பது. இந்த மலத்தின் குணம் ஆன்ம அறிவை மறைத்து நிற்பதாகும். இவ்வறியாமை தேய்ந்தால் ஆன்ம அறிவு தானே விளங்கும். ஆன்மாவிற்கும் ஆணவமலம் என்பதற்கும் உள்ள இயைபு எதுபோல்வதெனின்: நெல்லிருப்பது முதல் அதனோடு உமியும், செம்பிருப்பது முதல் அதனுடன் களிம்பும் இருத்தல்போல ஆன்மாவொடு இயற்கையாகவே பொருந்தியிருக்கின்ற ஓர் பொருளாம் ஆணவமலம் என முடிவு கூறலே பொருத்தமாமென்க. ஸ்படிகமானது இயற்கையில் பிரகாசமுடையதே யாயினும், 'பாசியினால் மூடப்பட்டிருக்கும்போது அப் பிரகாசம் புலப்படாததுபோல் ஆன்மா இயற்கையில் அன்பைக் குணமாக உடையதாயினும் ஆணவ மலத்தினால் மூடப்பட்டிருக்கும்போது அவ்வன்பு புலப்படாமல் ஆணவம் மறைத்து நிற்கும். ஆனால் ஸ்படிகத்தை மூடியிருக்கும் பாசி நீக்கப்பட்டவுடன் ஸ்படிகத்தின் இயற்கையொளி புலப்பட்டுத் தோன்றுதல்போல, ஆன்மாவை மூடியிருக்கும் ஆணவமலம் விலகினால் ஆன்ம அறிவு தானே விரிந்து திகழும்; திகழவே அன்பும் புலப்பட்டுத் தோன்றும்.

இனி அறியாமை நீங்குவதும், அன்புண்டாவதும் யாங்ஙனமெனில், பிற சீவர்களை யெல்லாம் தம் முயிரைப்போல் கருதி அவைகளுக்கு இடையூறு நேர்ந்த காலத்தே அதனை நீக்க முயலுவதனாலும், எல்லாம்வல்ல இறைவனிடத்தே உண்மையான பக்தி செலுத்துவதனாலும், அறியாமை நீங்கி அன்புண்டாகும். இறைவனுக்கு வேண்டுவது உண்மை யன்பே யன்றி மற்றில்லை. கண்ணப்ப நாயனார் வேட்டுவராயிருந்தும் ஆசார அனுட்டானத்தைப் பின்பற்றுபவராயிருந்தும், மாமிசத்தை எச்சிற்படுத்தி இறைவனுக்குப் படைக்கும் இயல்புடையவராயிருந்தும், அவருடைய நிவேதனத்தை இறைவன் எவ்வளவு அன்போடு ஏற்றுக்கொண்டார் என்பதனைப் பார்க்கும்போது, உண்மை யன்பே இறைவனை வசப்படுத்தற்குரிய மார்க்கமாகு மென்பது இனிது புலப்படும். இறைவன் கண்ணப்பருடைய அன்பை வியந்து சொன்னதுபோல் நக்கீரனார் கண்ணப்பர் திருமறம் என்பதில் மிக நன்றாகப் பின் வருமாறு சொல்லுகின்றார்.

"பூசனை செய்யுங் குனிசிலை வேடன்
குணமவையாவன உரிமையிற் சிறந்த
நன்மாதவ னென்றுணர்க வவனுவந்
தியங்கியவிட முனிவன மதுவேயவன்
செருப்படியாவன விருப்புறு துவலே
எழிலவன் வாயது தூயபொற் குடமே
அதனிற்றங்கு நீர்கங்கையின் புனலே
புனற்கிடுமாமணி யவனிரைப் பல்லே
அதற்கிடு தூமல ரவனது நாவே

உப்புனல் விடும்பொழுது ரிஞ்சிய மீசைப்
புன்மயிர் குசையினு தம்மடிக் கினிதே
அவன்றலைத் தங்கிய சருகிலை தருப்பையிற்
பொதிந் தவங்குவி கற்பகத்தலரே
அவனுவந்திட்ட விறைச்சி யெமக்கு
நன்மாதவரிட்ட நெய் பாலவியே.''

கண்ணப்ப நாயனருடைய முதிர்ந்த அன்பின் திறத்தை இத்தகையதென வரையறைப்படுத்திக் கூறலாகாமையா னன்றே

''கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறிதலல்லது,
மற்றோரறியு மன்பன்றது''

என்று உய்யவந்த தேவ நாயனரும் அருளிச் செய்வாராயினர். உள்ளங் குழைந்து இறைவன்மீது பதிகங்கள் பாடிய ஸ்ரீமந் மாணிக்கவாசகப் பெருமானே,

''கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பில் என்னையு மாட்கொண்டருளி
வண்ணப்பணித் தென்னைவா வென்றவான் கருணை
சுண்ணப் பொன்னீற்றிற்கே சென்றூதாய் கோத்தும்பீ.''

என்று கண்ணப்ப நாயனரைப் பற்றி விசேஷித்துக் கூறியிருக்கிறாரென்றால் வேறென்ன சொல்ல வேண்டும்?

இவ்வன்பானது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும்.

அரக்கானது வெயிலின் முன் உருகுதல் போல்வது மந்ததரமென்றும், மெழுகானது வெயிலுக்கு முன் உருகுதல் போல்வது மந்தமென்றும், நெய்யானது சூட்டினுக் குருகுதல் போன்றது தீவிரமென்றும், வெண்ணெய் இடையறா தொழுகுதல் தீவிரதரமென்றும் சொல்லப்படும். இந்நான்குவகையினுள் கண்ணப்பர் செலுத்தியது தீவிரதரம் என்பதன்பாற்படும்.

இனி, உண்மை யன்பு ஒருவனுக் குண்டாவதற்குச் சான்றோர்களுடைய கூட்டுறவும், ஞான நூலாராய்ச்சியும், இறைவனிடத்துப் பக்தியும் இன்றியமையாது வேண்டப்படுவனவாம். இதுபற்றியே,

''நிலத்தியல் பானீர் திரிந்தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல் பதாகு மறிவு''

என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் அருளிச் செய்வராயினர்.

---

யாரையேனும் மதித்துத்தான் தீரவேண்டுமானால், அவர் பிழையின் சுமையைத் தாங்கும் விதத்தைவைத்து மதிக்க வேண்டுமேயன்றி, அவர் அச்சுமையை ஏற்படுத்திக்கொண்ட காரியத்தை வைத்து மதிக்கலாகாது.

சிவஞானச் செல்வரான பட்டினத்துப் பிள்ளையார்,

"நல்லா ரிணக்கமும் நின் பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுள தோவகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சியே கம்பனே"

என்று அருளிச் செய்ததும் இக் கருத்துப்பற்றியே என்க.

இனி, இவ்வன்பானது அறிவு முதிர்ச்சி ஆக ஆக, தானும் முதிர்ச்சி யுறும் தன்மையுடையது. உதாரணமாக ஒரு குழந்தை பிறந்தவுடனே தாயை அறிந்து அவளிடத்துமட்டும் அன்பு செலுத்திப், பின் காலம் செல்லச் செல்ல தனது தந்தை, உற்றார், உறவினர், ஆசான், நண்பர் முதலானவர்களிடத்து அன்பு செலுத்தக் காண்கின்றோம். இதனால் அறிவு விருத்தி அதிகமாக அதிக மாக, அன்பும் முதிர்ச்சி யுறுகின்றதென்பது நன்கு புலப்படுகிற தன்றோ ?

ஏனையோரிடத்து ஒருவனுக்குத் தோன்றும் அன்பைக்காட்டினும், புதல் வரிடத்துத் தோன்றும் உள்ளன்பே மிகப் பரிசுத்தமுடையதாகும். ஏனெனில், மற்றோரிடத்து ஒவ்வோர் பயன் கருதி அன்பு செலுத்துவோம். பிள்ளைக ளிடத்து மட்டும் பயன் சிறிதும் கருதாது அன்பு செலுத்துவதாலென்க. மேலும், காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூக் குற்றங்களும் தோன்றாப் பருவம் குழவிப் பருவமாதலால், அவர்களிடத்துச் செய்யும் அன்பு சிவனிடத் துச் செலுத்தும் அன்பிற்குச் சமமாகும். இதுபற்றியே,

"படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும்
உடைப்பெருஞ் செல்வராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்தும்
நெய்யுடையடிசில் மெய்படத் திமிர்ந்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பலக்குறை யில்லைத் தாம் வாழும் நாளே"

என்னும் ஆன்றோர் திருவாக்குமெழுந்தது. இம்மாதிரியாக அன்பு நிகழப் பெறுமாயினும் அதனுடைய நிகழ்ச்சியின் ஏற்றத்தாழ்விற்கேற்பப் பலவாறு அந்த "அன்பு" பெயர் பெறும். பெற்றோர்களுக்குப் புத்திரர் மாட்டுத் தோன் றும் அன்பு "வாஞ்சை" என்றும் ஒருவனுக்குப் பிறனொருவன் மாட்டு நிகழும் அன்பு "நட்பு" என்றும், தம்பதிகளுக்குள் ஏற்படும் அன்பு "காதல்" என் றும், ஒருவனுக்குத் தன்னினும் தாழ்ந்த சீவர்களிடத்துண்டாகும் அன்பு "இரக்கம்" என்றும், ஆன்மாக்களுக்குக் கடவுளிடத்துண்டாகும் அன்பு "பக்தி" என்றும், இறைவனுக்குச் சீவர்கண் மாட்டு நிகழும் அன்பு "அருள்" என்றும் பெயர்பெறும். இம்மாதிரியே மற்றவைகளையும் வைத்துக் கண்டு கொள்க. ஆகவே அன்பினுடைய இலக்கணம் இத்தகையதென ஒருவாறு கூறப்பட்டது.

இனி, சிவத்தின் இலக்கணத்தைப்பற்றிச் சிறிது கூறுவாம். சிவமென் னும் பதத்திற்கு மங்களம் என்று பொருள். எல்லாம்வல்ல கடவுள் ஒன்றே சிவமெனப் பெயர் பெறும். இந்த இறை முதற் பொருளானது தன் வயத்

தனுதல், தூய உடம்பினனாதல், இயற்கை யறிவினனாதல், முற்று முணர்தல் இயல்பாகவே பாசங்களினீங்குதல், 'பேரருளுடைமை' வரம்பிலின்பமுடைமை, முடிவிலாற்றலுடைமை என்னும் எண் குணங்களை யுடையது. இவ்வெட்டுக் குணங்களுள், இக்கட்டுரைக்கு வேண்டுவதாகிய பேரருளுடைமை என்பதனை மட்டும் சிறிது ஆராய்வாம். ஒவ்வொன்றினையும் பற்றிக் கூறின் மிக விரியும்.

அறிவுப் பொருள்களான ஆன்மாக்கள் தம் இயற்கை யறிவு சுருங்கிப் பேரின்ப நுகர்ச்சிப்பேறு எய்த முடியாமல் வருந்துதலைக் கண்டு, அவர்கட்குப் பாசக் கவிப்பினை நீக்கிப் பேரின்பந் துய்ப்பித்தல் வேண்டும் என்று இறைவனுக்கு இயற்கையிலேயே எழும் இரக்கம் தான் பேரருளுடைமை என்று சொல்லப்படும். இந்த அருளையே இறைவன் குணமாக உடையவ்னுதால் அது அவனின்றும் பிரியாததென்பது தேற்றம். இதுவே சக்தியென்றும் சொல்லப்படும். இறைவன் வேறு சக்தி வேறு என்று இதனால் கருதக்கூடாது. சூரியன் தன்னை நோக்கினவழி அது கதிரோனெனப் பெயர் பெறுதல் போலவும், அதன் ஒளியை நோக்கிய வழி கதிரெனப் பெயர் பெறுதல்போலவும், இறைவன் தன்னை நோக்கிய வழி சிவமெனவும், இறைவனுடைய அருளை நோக்கிய வழி சக்தி எனவும் வழங்கப்படும். ஆனுலும், ஞாயிறும் அதன் ஒளியும் குண குணிகளாதலான், ஒன்றேயாதல்போல, சிவமுஞ் சக்தியும் குணகுணிகளாகலான் ஒன்றேயாமென்றுணர்க.

> "பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
> லந்நிற மண்ணலுமம் பிகையுஞ்-செந்நிறத்த
> ளொந் நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவ பதியு
> மந் நிறத்தனு யிருப்பனுங்கு"

என்னும் ஆன்றோர் திருவாக்கு மிவ்வுண்மையை வலியுறுத்தும்.

இனி, சிவமும், சீவ அன்பும் ஒன்றேயாதல்போல், ஆன்ம சக்தியும், சிவ சக்தியும் ஒன்றேயா மென்பதுங் காட்டுவாம். சூரியனுடைய ஒளியின்றிக் கண்ணொளி விளங்கமாட்டாது. அதுபோல சிவ சக்தியின்றி ஆன்ம சக்தி விளங்கமாட்டாது. கண்ணும் சூரிய கிரணமும் பொருளளவான் வேறாயினும், கண் ஒன்றைக் காணும்போது கதிரொளியும் உடன் நின்று காட்டுதலின், அவை யிரண்டும் ஒருமையுறுகின்றன. அதுபோலவே ஆன்மாவினிடத்து அன்பு தோன்றும்போதெல்லாம் சிவ சக்தி அவ்வான்மாவினுடன் நின்று அவ்வன்பை மிகுவித்தலால் சிவ சக்தியும் ஆன்ம சக்தியும் ஒருமையுறுகின்றன. சிவமும் சிவசக்தியும் ஒன்றேயென ஏற்கனவே நிரூபித்திருப்பதாலும், சிவ சக்தியும் ஆன்மாவினிடம் நிகழும் அன்பும் ஒன்றேயாமென இங்குக் காட்டியிருப்பதாலும், அன்பு, சிவம் என்னும் இரண்டும் ஒன்றேயாம் என்பது அறியக்கிடக்கிறதன்றோ? ஆகவே அன்பு என்பது ஈஸ்வராம்சம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறது. இவ்வளவு மாட்சியுடைய அன்பு ஒவ்வொருவராலும் பிறரிடம் செலுத்தப்படவேண்டுமென்பது பொருத்தமேயாம். அங்ஙனம் அன்பு நிகழ்வதற்குக் கொல்லாமை, ஜீவகாருணியம், பிறர் வருத்தங் கண்டால் அவர்களுக்குக் கைம்மாறு கருதாது உதவிசெய்தல், முதலானவைகளை அனுஷ்டிக்கவேண்டுவது அவசியம் ஆகும். அனுஷ்டிக்கவே, ஆன்மாவினிடத்தே அன்பு விரிந்து தோன்றும். இவ்விதமாக அன்பு

முதிரவே, ஆன்மா ஏகதேச சீவ இலக்கணத்தை விட்டுச் சுத்த சிவ சொரூப மாகத் தோன்றும். அதுவே அத்துவித முத்திநிலை யெனப்படும். அந்த நிலையே பேரின்ப நிலை. அதுவே மக்கட் பிறவி பெற்ற நம்மனோரால் வேண்டப்படுவது ஆதலால், நாம் ஒவ்வொருவரும் பிறரிடம் அன்பு செலுத்த முயல வேண்டும். நாம் இறைவனிடத்து அன்புசெலுத்தி அன்பிற்கும் சிவத்திற்கு முள்ள இயைபினை உணர்ந்து உய்யவேண்டும் என்னும் உண்மையினைப் புலப்படுத்தலே

"அன்பும் சிவமு மிரண்டென் பாறிவிலார்"

என்று முதன் முதற் கூறிய திருவாக்கு எழுந்தது.

"அன்பின் வழியது உயிர் நிலை அஃதிலார்க்
கென்பு தோல் போர்த்த உடம்பு."



உண்மையே தெய்விகம் பொருந்தியது. சுதந்தரம் இரண்டாவது ஸ்தானம் பெறும். உண்மை உணர்வதற்குச் சுதந்தரம் அவசியமானாலும் சுதந்தரத்தோடு உண்மை சேராவிடில், சுதந்தரத்தால் ஒருபயனும் உண்டாகாது.

# மேனாட்டுத் தத்துவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

காண்ட் நாம் காணும் உலகம் வேறு உலகத்தின் தோற்றம் என்றார். அத் திவ்ய உலகம் நம்மால் காணமுடியாதது. ஆயினும் அதுதான் உண்மை ஞானம் தரக்கூடியது. இந்த ஞானத்தை கிரஹிக்க நமது மனத்திற்குச் சக்தியிருக்கிறது. ஆனால் நமது சிந்தனையும் அவ்வுலகமும் வேறன்று. நமது மனத்தில் உதிக்கும் எண்ணங்கள் அவ் வுலகத்தைப் பற்றியனவே. ஆகையால் நமது எண்ணம்தான் அந்த உலகமும் என்றுகூடச் சொல்லலாம். நமது எண்ணம் என்பது என்ன? நம்முடைய அனுபவந்தான். நமது அனுபவத்தில் தோன்றாதது நமக்குத் தெரியாது, நம்மால் அறிய முடியாது. நாம் கேள்விப்படாததைப்பற்றி நமக்கு என்ன தெரியும்? நாம் பார்க்காததைக் குறித்து நமக்கு அபிப்பிராய மென்ன விருக்கும்? தத்துவ ஆராய்ச்சியின் நோக்கம், எண்ணம் அனுபவத்தை ஒத்திருக்கிறதா, அனுபவம் பூர்ண (குறைவற்ற) அனுபவந்தானா வென்பதைக் கண்டு பிடிப்பதுதான்.

எண்ணம் என்பது ஒரு மனதினுடைய குணாதிசயம். ஆனால் மனம் என்றால் ஒரு குறித்த மனிதனுடைய மனமல்ல. ஏன்? ஒருவனுடையதாயின் அவன் நினைத்தபடி எண்ணுவான். உலகத்தை நினைத்தபடி நிர்மாணித்துக் கொள்வான். இதைத் தடுக்கவே, காண்ட் உண்மை உலகம் ஒன்று, நமது புலன்களுக்குத் தோன்றும் உலகமொன்று என்று யோசித்தார்.

காண்டிற்குப் பின்வந்த பிஷ்டெ (Fichte) என்பவர், இரண்டு உலகங்களில்லை, ஒன்றுதான். அவ்வுலகத்தை அறிவது நமது மனம் அதாவது 'அஹம்' (Ego) என்று சொல்லப்படும் 'நான்' என்றார். இந்த 'அஹம்' தனி மனிதனல்ல. மனிதன் என்றால் 'அஹம்' என்று பொருள். இவ்வஹம் உலகத்தைச் சிருஷ்டிக்கிறது. தனக் கிஷ்டப்போலவா? அன்று, அன்று. 'அஹம்' என்பது சாக்ஷாத் 'சித்'. இச் 'சித்' யாதென பிஷ்டெ தெளிவாகச் சொல்லவில்லை. இதையே கடவு ளெனலாம். எதற்காக உலகத்தைச் சிருஷ்டிக்கிறது? தன்னை அடக்கிக் கொள்ளவே. அதாவது தனக்கு ஒரு கட்டுப்பாடு இல்லாவிட்டால் தன்னிஷ்டப்படி யோசிக்கத் தோன்றுமென்று ஒருலகத்தைத் தானே நிர்மாணித்துக் கொள்கிறது. செய்துகொண்டு அதை ஆராய்ந்து அறிகிறது. அறிந்து தான் செய்யவேண்டிய கடமைகளைச் செய்கிறது. மனிதன் சில கர்மாக்களை நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கிறான். இவைகளைச் சரிவரச் செய்து முடிக்க, மனம் (அஹம்) உண்டாக்கும் உலகமே சாதனம்.

---

தீயநெறியில் செல்லாதிருக்க எப்பொழுதும் எச்சரிக்கையா யிருப்பதை விட நல்ல விஷயங்களில் மனதை ஈடுபடுத்தி அதன் மூலம் தீயநெறி நினைவே எழாதிருக்கச் செய்வதே நலம்.

பிஷ்டெக்குப் பின் ஷெல்லிங்கு (Schelling) என்பவர் அவருடைய தத்துவத்தைப் பரவச் செய்தார். ஆனால் அப்படிச் செய்வதில் இவர், உலகத்தை மனம் செய்வதாயும், மனம், உலகத்தின் ஓரிய பொருளாகவும் எடுத்துக்கொண்டார். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. மனம் உலகத்தைச் சிருஷ்டித்திருந்தால், எப்படி உலகத்தின் அம்சமாக விருப்பது? ஆகையால் ஷெல்லிங்கு உலகமும் மனமும் கடவுளின் அம்சங்களெனத் தீர்மானித்தார்.

கான்டிற்குப் பின் வந்த முக்கிய தத்துவ ஞானி ஹேகல் (Hegel) என்பவர். இவரது தத்துவத்தையே ஆதாரமாகக்கொண்டு இன்றைக்கும் அனேகர் ஆராய்ச்சி செய்கின்றனர். இவருடைய முக்கிய கருத்தை 'வளர்ச்சி' என்று சுருக்கமாய்ச் சொல்லலாம். 'பாகற்காய் நட்ட சுரைக்காய் முளைக்காது.' இரண்டாவது நம்முடைய சகவாசம் எப்படியோ அப்படியே நம்முடைய குணநிசயமும். ஒரு மனிதன் நல்லவன் கெட்டவன் என்பது அவன் வாசம் செய்யும் ஸ்தலத்தையும் அவனுடைய சாதாரண சினேகிதர்களையும் பொருந்திருக்கிறது. ஏனெனில், இவையெல்லாம் அவனுடைய உண்மை ஸ்வரூபத்தை விளக்குகின்றது. மனம் உலகத்தைச் சிருஷ்டி செய்வதில்லை, உலகமென்பது ஒன்று. தனியாக இல்லை. நம்முடைய அனுபவமே உலகம். ஆனால் அனுபவம் வளர்ந்துகொண்டேயிருக்கிறதே! ஒரு குழந்தை பிறக்கும்போது அதற்கு அனுபவமில்லை. ஏதோ காற்று வீசுகிறது. உடனே அதன் தேகம் கூசுகிறது. பசியெடுக்கிறது. உடனே அழுகிறது. அழுதால் ஆகாரம் கொடுக்கிறார்கள். அதன் அனுபவமெல்லாம் இவ்வளவே. சில மாதங்கள் சென்றதும் அதற்குச் சில புதிய விஷயங்கள் தெரிகின்றன. அதாவது அதன் அனுபவம் அதிகமாயிற்று. சில வருஷங்களான பின் இன்னும் அனேக விஷயங்கள் தெரிகின்றன. அனுபவம் மறுபடியும் விஸ்தாரமாயிற்று. அனுபவம் முதலில் உண்டாகிறதே அதை வைத்துக்கொண்டே புதிய அனுபவத்தை நிர்ணயிக்கிறோம். உதாரணமாக பால் வெண்மையாயிருப்பதை ஒரு குழந்தை பார்க்கிறது. சரி, வெண்மையான வஸ்துக்களெல்லாம் பால் என்று ஒரு சம்பிரதாயம் வைத்துக்கொள்கிறது. சில தினங்கள் சென்று வீட்டிற்குச் சுண்ணாம்பு பூசக் கொண்டுவந்தார்களானால், இதென்ன, சுவரில் பாலைப் பூசுகிறார்களே யென யோசிக்கிறது. யாராவது உண்மையை வெளியிட்ட பின், வெளுத்ததெல்லாம் பாலல்லவென்பது அதற்குத் தெரிகிறது. இப்படியே அனுபவம் வளர்கிறது. புதிய அனுபவம் உண்டாகும்போது நாம் அதை நமது பழைய அனுபவத்தோடு ஒத்திட்டுப் பார்க்கிறோம். சரியாக விருந்தால் அதை கிரஹித்துக் கொள்கிறோம். இல்லையேல் தள்ளிவிடுகிறோம். இல்லை புதிய அனுபவமே உண்மையென்று திட்டமாகத் தெரிந்துவிட்டால், நமது பழைய அனுபவத்தையே மாற்றிக்கொள்ளுகிறோம். உதாரணமாக, ஒரு மனிதன் வெகு நல்லவனென்று இதுவரையில் நமக்குள்ள அனுபவத்தில் தெரியவருகிறது. அவன் ஒரு தீய தொழிலைச் செய்துவிட்டானென்று கேள்விப்பட்டால் நாம் "சே, அவன் அப்படிச் செய்பவனல்லன்" என்று யோசிக்கிறோம். அதாவது இப் புதிய அனுபவம் முன்னனுபவத்தோடு முரண்படுவதால் புதிய அனுபவத்தைத் தள்ளிவிடுகிறோம். ஆனால், நாமே கண்

---

ஜனங்களிடை இரக்கமும் சகோதர அனுதாபமுமே மனிதவாழ்வில் பெறுவதற்காக முயலவேண்டிய பேருணர்ச்சிகளாகும்.

கூடாக, இம்மனிதன் தீய செய்கையைப் பார்த்துவிட் டிருந்தோமானால் அப்போதென்ன? நாம் முன் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்றிக் கொள் கிறோம். உலகமென்பது ஒரு படக்காட்சி போன்றது. அது நமக்குத் தோன்றிக்கொண்டே போகிறது. நாம் அதைக் கிரஹிக்கவேண்டும். கிர ஹிப்பதென்றால் தனித்தனியாகப் பிட்டு, ஒன்றோடொன்று சம்பந்தமில்லா மல் கிரஹிப்பதல்ல. எல்லாவற்றையும் ஒன்றாய்த் திரட்டி ஒருங்கே கிரஹிப் பது. நமக்கிருக்கும் அனுபவம் சிறிதாயினும் மகத்தாயினும் அதை ஒழுங்கு படுத்தவேண்டும். இதுவே மனத்தின் முக்கிய தொழில். ஏனெனில் முழுப் பொருளுக்கே அர்த்தமுண்டு. ஒரு கடிகாரத்தை எடுத்துக் கொள்வோம். கடி காரம் என்பது முகம், எண்கள், இருகைகள், முட்கள், சக்கரங்கள் எல்லாம் சேர்ந்தவையாயினும், ஒவ்வொரு பாகமும் தன்னுடைய ஸ்தானத்திலிருந்தாற் றான் அர்த்தமுண்டு. அம் முழுப்பொருள் அப்போதுதான் கடிகாரம் என்று பெயர் பெறும். ஆனால் கடிகாரம் மாத்திரம் தனியாக கருதப்படாது. கடி காரத்தை உபயோகப்படுத்தும் மனிதனல்லால், அது எதற்குப் பிரயோஜ னம்? ஆகையால் பெரிய உலகத்தில் கடிகாரம் ஓரம்சந்தான். இப்படியாக வஸ்துக்கள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட் டிருப்பதை அறிவதே ஞானம்.

ஞான மெப்படி உண்டாகிற தென்று மேலே சொல்லப்பட்டது. ஏற் கனவே ஏற்பட்ட அனுபவமே அளக்கும் கருவி. புதிய அனுபவமே அளக்கப் படும் வஸ்து. அளவு சரியா யில்லாவிட்டால் தள்ளிவிடுகிறோம், சரியா யிருந்தால் ஸ்வீகரிக்கிறோம். ஹேகல் வித்தைகள் எல்லாவற்றையும் இம் மாதிரி மூன்றாகப் பிரித்து, ஒன்றைவிட ஒன்று மேலான அனுபவத்தைக் குறிக்கிறதென்று சொல்லியிருக்கிறார்.

அன்பர்களே! இவருடைய தத்துவத்தை மேலே சொல்லப்புகின் வெகு சிரமமாக விருக்கும். இவர் தத்துவம் அவ்வளவு நுட்பமானது. ஹேகலுக் குப் பிறகு எத்தனையோ பெரிய தத்துவ ஞானிகள் இருந்திருக்கின்றனர். ஆனால் அவர்களுடைய தத்துவங்களைச் சுருக்கமாகச் சொல்வது முடியாத காரியம். இவர்களில் சிலர் கான்டையும் சிலர் ஹேகலையும் பின்பற்றி யிருக் கிறார்கள். ஆனால் இருதிறத்தாரும் தற்காலம் மேன்மேலும் ரஸாயன சாஸ்தி ரத்தை ஆதாரமாகக் கொண்டு மேலே யோசிக்கிறார்கள். இவ்வரிய தத்துவங் களைத் தற்சமயம் ஆராய்ந்து அவற்றின் சாராம்சத்தை எடுத்துரைக்க சாவகாச மில்லை. ஆயினும் சீக்கிரத்தில் அவகாசம் ஏற்படும் என்ற நம்பிக்கையினால் மேனாட்டுத் தத்துவத்தை ஹேகல் பெருமானோடு நிறுத்தலாமென்று யோசிக் கிறேன். ஈஸ்வரன் இதற்குக் கருணை புரிவா னெனப் பிரார்த்திக்கின்றேன். மேனாட்டுத் தத்துவத்தை முழுவதும் எடுத்துச் சொல்வது என்போன்றார்க்கு வெகுசிரமம். ஆயினும் தமிழ்நாட்டு மக்களுக்கு மேனாட்டு அரிய விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டுமென்றே அரைகுறையாகவாவது எடுத்துச் சொல்லத் துணிந்தேன். பிழைகள் இருப்பினும் க்ஷமித்துக்கொள்ளும்படி அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

முற்றிற்று.

---

ஏதேனும் பழுதிலாத தொன்றை இயற்ற முயல்வதைப்போல் ஆன்மா வைப் புனிதமாக்குவதும் சமய வாழ்வு வாழச் செய்வதுமானது வேறெதுவு மில்லை. ஏனெனில் பரிபூரணமே கடவுள், அதனால் பூரணத்தை நாடி முயல் பவன் கடவுள் தன்மையை நாடுபவனாவான்.

# ஜீவகாருண்ய நீதி மொழிகள்.



(தொண்டைமான் புதுவை-மு. தங்கமணி பிள்ளை.)



அறந்தனை யிகழ்ந்தவன் திறந்தனை இழப்பான்
ஆடுரித் துண்போன் படுநர காழ்வான்
இறைவனைப் போற்றி மறைநூ லோது
ஈனமிக நல்கும் ஊண்வகை விலக்கு
உயரிய போதம் உயிர்க்கொலை மறுத்தல்
ஊண்மிக வுண்ணும் வீணர்சொற் கேளேல்
என்றும் ஜீவனை ஒன்றாய்க் கருது
ஏற்றது உண்டோ நாற்றப் புலாலில்
ஐயம் புகினும் தீயபுலா லகற்று
ஒடுக்கமது கொண்டோன் கடுங்கொலை புரியான்
ஓருயிர் தமக்கும் ஊறுகள் புரியேல்
ஔவை நூலைச் செவ்வையாய் ஓது
கடுவிஷ மென்றுநீ விடுவாய் கொலையை
கானகம் ஏறிநீ மானினம் வருத்தேல்
கிள்ளையைப் பிடித்துநீ இல்லில் வளர்க்கேல்
கீர்த்தியில் புலாலை நேர்த்தியாய் விலக்கு
குஞ்சுக் கொலையை நஞ்செனக் கொள்மின்
கூற்றுவன் வருமுன் நாற்றப் புலாலொழி
கெட்டே போவான் முட்டையது உண்போன்
கேடு என்பது நீநாடுங் கொலையே
கைதவ மாளும் நீசெய்யுங் கொலையால்
கொலையது புரிவோன் கலையது உணரான்
கோரக் கொலைகள் வீரம் சிதைக்கும்
சத்திலாப் புலாலை நித்தம்நீ யகற்று
சான்றோர்க் கழகு கொன்று தின்னாமை
சிற்றுயிர் தம்மையும் பற்றுடன் நோக்கு
சீவ ஹிம்சையால் பாவவேர் தழைக்கும்
சுத்த சைவம் மெத்தவும் மேலாம்
சூதான பலியை வாதின்றி விலக்கு
செய்தவ மொழியும் நீசெய்யுங் கொலையால்
சேவலைக் கொல்லும் பாவிசொற் கேளேல்

சைவப் பற்றைநீ கைக் கொள்வாயே
சொற் சோர்வடையும் நாற்றப் புலாலால்
சோராது உயிர்களை நோய்க் காக்க
தவத்திலும் மேலாம் ஜீவ காருண்யம்
தாழ்ந்த புலாலை ஆழ்ந்து பார்த்தகற்று
தின்பதற் கென்றுநீ வன்கொலை புரியேல்
தீய புலாலைத் தூயவ ருண்ணார்
துள்ளிடும் முயல்தனை கண்ணியிற் கொள்ளேல்
தூயமனங் கொண்டுநீ தீயபுலா லகற்று
தெண்ணீர்க் கயலைநீ உண்ணமனங் கொள்ளேல்
தேட்டமது கொண்டுநீ ஆடுரித் துண்ணேல்
தைரியங் குன்றும் தீயதோர் புலாலால்
தொல்லை மிகுபலியை ஒல்லைநீ யகற்று
தோன்றல் தம்மக்களை என்றும்நீ வருத்தேல்
நலிவது கொள்வாய் பலியது கொடுத்தால்
நாட்டிற் கிழிவாம் ஆட்டின் கொலைகள்
நிதிதனை யிழப்பாய் சதிகொலை புரிந்தால்
நீக்குவாய் பலியை ஊக்கமது கொண்டு
நுண்ணிய மீனையும் உண்ணநீ விரும்பேல்
நூலறிந் தென்பயன் கொல்லாமை யின்றேல்
நெடுமா லலவோ கடல்வாழ் மீன்கள்
நேர்த்தியாய் சைவம் பூர்த்தியாய்க் கைக்கொள்
நைவதை உணர்ந்துநீ விலங்கினம் வருத்தேல்
நொந்திடும் துன்பம் வந்திடும் பலியால்
நோன்பினிற் சிறந்தது கொன்று தின்னாமை
பலியது கொடுப்போன் மெலிவது திண்ணம்
பாவமது போக்கும் ஜீவ காருண்யம்
பித்தனும் பொறுப்பனோ நித்தமிப் பலியை
* பீதகன் தொடருவான் பாதகக் கொலையினால்
புத்தர்தம் போதம் சித்தமது திருத்துக
பூவில் வாழுயிரை மேவிநீ வருத்தேல்
பெற்றிடுவாய் இழிவு நாற்றப் புலாலால்
பேரின்பம் அடையக் காருண்யம் வேண்டும்
பையல்கட் கெல்லாம் சைவபோ தங்கொடு
பொல்லாங்கு விளையும் கொல்லாமை யின்றேல்
போற்றுவாய் ஈசனை நாற்றப்புலா லொழித்து

* பீதகன்=சனி.

மக்களாம் உயிரெலாம் மாண்புடை ஈசற்கு
மாண்புக் கிழிவாம் ஊன்மிக உண்ணல்
மிருகபலி கொடுப்போன் அருநர காழ்வான்
மீளா நரகத்தில் ஆழ்வான் கொலைஞன்
முட்டையும் ஊனும் முழுமூடராக்கும்
மூதாதையர் மொழியைப் பாதகம் செய்யேல்
மெத்தவும் மேலாம் புத்தர்தம் கருணை
மேழிபிடி கையால் கோழிதனை யறுக்கேல்
மைவிழி மானை என்றும்நீ வருத்தேல்
மொழிதனை யுணர்ந்துநீ பலிதனை யகற்று
மோதிடுங் கடலில் வீசிடேல் வலையை
வளர்த்திடும் ஆட்டைநீ பலியது கொடுக்கேல்
வாட்டிடுந் தூண்டியை விட்டொழிந் திடுவாய்
விரதமது போகும் கோரமிகு பலியால்
வீண்கர்வங் கொண்டுநீ ஊன்மிக உண்ணேல்
உயிர்வதை செய்குவோன் சிபிகருணை யறியான்
ஊண்மிகு சாலை வீணர் தமக்கிடமாம்
வெறிகள் தருமிகு கறிவகை யுண்ணேல்
வேலை வாழ்மீனை வலைகொளல் விடுமின்
வைகறையி லெழுந்து சைவமறை ஓது
ஒன்றெனக் கருதுவாய் என்றும் நீஉயிரை
ஓதிடும் மறையில் நீதிதனை யுணர்மின்
வாழ்க சைவம் ஆழ்க அசைவம்.

# மறுப்பின் மேல் ஓர் குறிப்பு

(தோ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பீ. ஏ.)

சென்ற கார்த்திகைத் திங்கள், "ஆனந்தன்" வெளியீட்டில், ஸ்ரீ வைகுண்டம், திரு. வி. அனந்த கிருஷ்ணன் பீ. ஏ., அவர்கள், யான் எழுதியுள்ள "கேகயர் கோமகள் இழைத்த கைதவம்" என்னும் கட்டுரைக்கு மறுப்பு ஒன்று எழுதியுள்ளதை அன்பர்கள் அறிவார்கள். அன்பர் வைணவப்பற்று மிகவுடையார் என்பதும், சமய சம்பிரதாயத்தில், தயரதனைத் தலைநின்ற பரம பாகவதராகப்பேணும் பெருந்தகை என்பதும், அவர் எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புக்களால் விளக்கமுறும். "சாய்தல் உவத்தல் இன்றி ஒரு பொருட்கண், ஆய்தல் அறிவுடையார் கண்ணதே" என்பது நாலடியில் இரண்டடி. தமிழ் இலக்கிய உலகில், அத்தகைய ஆராய்ச்சியின் பயனைக் கிடைத்த முடிவுகளே அறிஞர் கொள்ளத் தக்கனவாகும். இம்முறைக்கு மாறுபட்டு, ஆராய்ச்சி அறிஞர், தமிழ் இலக்கியங்களை ஆராயப்புகுவாரானால் அவர் காணும் முடிவுகள் முரண்பட்டவைகளாகவே முடியும் என்பதில் ஐயமில்லை.

நாம், "கெடுத் தொழிந்தனை" என்று தொடங்கும் செய்யுளுக்குக் கூறிய உரையையும், "குரிசிலர் நாட்டில் கொடைபரிமை கோடல் வான்முறைவந்த வழக்கறமாகும்," என்று நாட்டிய கொள்கையையும், அன்பர் மறுப்பதற்கில்லை. ஆனால், "கைகேயியின் உடல் பொருள் ஆவி ஆகிய அனைத்துமே தயரதன் வயமிருக்க, ஒரு சிறு நாடோ மன்னனுக்கு உரிமையில்லை" என்று அன்பர் கூறுவது ஒரு சிறிதும் பொருந்தாததாகும். கைகேயி, அரசனது காதற் கிழத்தியரில், தலைசிறந்த தலைவியாக அமைந்து வாழலாம்! உடல் பொருள் ஆவி மூன்றையும் தலைவனுக்கே அர்ப்பணம் செய்திருக்கலாம்!! ஆனால் அவளுடைய உரிமைப் பொருள்களை யெல்லாம், அரசன் இரந்து பெறலாமே யொழியத் தாமே உரிமையுடையவர்போன்று, அவளைச் சிறிதும் கலந்தாலோசியாது, பிறனொருவனிடம் கொடுப்பதற்கு மன்னனுக்கு உரிமையுண்டோ? தனக்கு உரிமையற்ற ஒரு பொருளை, உரிமையற்ற ஒருமகனுக்கு, உரிமையுடையவர் சம்மதம் எதுவும் பெறாமல் கொடுப்பதும், அவர் வாங்குவதும், எந்த அற நூலைச் சேர்ந்ததோ அறியேம்!

நிற்க, இனி அன்பர், "தயரதன் அறியா நீதியோ" "சுமந்திரர் அறியா நீதியு முளதோ," "துரும்பாயினும் தனக்குப் பாத்திய மல்லாவிடின் சத்திய சந்தனாகிய இராமன் ஏற்றுக்கொள்வானா," என்று வழக்கிடுவது அறிஞர் கொள்ளத் தக்கதன்று. ஓர் இலக்கியத்தையோ, அன்றிக் கவிதையையோ ஒரு

---

மனிதனுடைய உடைமையா யிருக்கக்கூடியது அறிவு ஒன்றே. ஆகையால் அறிவை விருத்தி செய்வதே ஆசைப்பட்டு அடைய முயலத்தக்க ஒரே வெற்றியாகும்.

வர் ஆராயப் புகுமுன், இவ்வாறு தயாதன் தவறிழையான்; சுமந்திரன் முறை பிறழான்; இராமன் அறந்தவறான் என்ற கொள்கைகளைத் திடமாகத் தம் மனத்தே கொண்டிருந்தால் அவர் காணும் முடிவுகளும், அவர்தம் கொள்கையை யொத்தவையாகவே யிருக்கும். விருப்பு வெறுப்பின்றி நடுநிலைமையில் நின்று ஆராயும் அன்பர்கட்குத்தான் உண்மைக் கருத்துக்கள் தெற்றென விளங்கும். மேலும், சுல்கச் சூளறம், பலர் அறியச் செய்த தொன்றன்று. அதனால், சுமந்திரன் முதலானோர், அதனைச்சுட்டி, அரசன் தவறிழையாவண்ணம் காக்கும் கடமையற்றோராவர் என்பது கருதத்தக்கது. மற்றும் அன்பர் கூறுமாறு, "தயரதன் மரணத்திற்கு, கைகேயி தன் உள்ளக் கருத்தை வெளியிடாதிருந்ததே காரணம்" என்னும் முடிவிற்கு என் கட்டுரை ஒரு சிறிதும் இடந்தரவில்லை என்பதைத் தாழ்மையாய்த் தெரிவித்துக்கொள்ளும் கடப்பாடுடையேன்.

இன்னும், "பாதன் அயோத்தி யரசுக்கே உரியவன். கோசலநாட்டிற்குச் சற்றும் அருகனில்லை," என்னும் கருத்து எவ்வளவு முரண்பட்டதாகும் என்பதை எடுத்துக் கூறுவது அவசியமின்று. அரசு என்பது, அரச பதவியும், அரசிருக்கையும், அரண்மனையும் மட்டுந்தானோ, அன்றி அவ்வரசன் கோனோக்கி வாழும் குடிகளும், அக் குடிகள் நிறைந்துள்ள நாடு நகரங்களும் சேர்ந்ததோ என்னும் வினாவிற்கு விடைபகர அன்பர் முயல்வாராக.

இனி, நான் எழுதிவரும், கட்டுரைகளெல்லாம், "கம்பர் கவி நலத்தை" எடுத்துக்காட்டும் கட்டுரைகளாகவே அமையும் என்பதை அன்பர்கள் அறிவார்கள். ஆதலின் இராம கதையையும், அதில் வரும் பாத்திரங்களின் குண குணங்களையும்பற்றி எனக்கென ஒரு கருத்தும் கிடையாது. கவியரசர் கம்பரது கருத்துக்கள் என்ன என்பதை யான் ஆராய்ந் தறிந்தமட்டில், எடுத்துக் காட்டுவதே எனது நோக்கமாகும். யானோ, கவியரசர் கவிதையில் காணும் செய்யுட்களுக்கு, உண்மைப் பொருள் காணும் அவா மிகவுடையேன். மேலும், கேகயர் கோமகள் இழைத்த கைதவம் என்னும் கட்டுரைக் கருத்துக்கள், என் சொந்தக் கருத்துக்கள் அன்று என்பதை முன்னமேயே அறிவித்துள்ளேன். மதுரையி லிருக்கும், திருவாளர். ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் M. A B. L., முதிர்ந்த ஆராய்ச்சியின் பயனாகக் கிடைத்த அரும் பெருங் கருத்துக்களே, அக்கட்டுரையில் பொதிந்து வைக்கப்பட்டுள்ளன. அக்கருத்துக்களி னிடையே ஐயம் காணும் அன்பர்கள், மறுப்பு எழுத முன் வருமுன் பாரதியார் இயற்றியுள்ள, "தயாதன் குறையும், கைகேயி நிறையும்" என்னும் புத்தகத்தை கவனமாய்ப் படித்து ஐயம் தெளிவார்களாக.



வாத்தியார்:—"உனக்குப் பாடம் வருமா வாாதா?"

மாணவன்:—"வரும் சார்."

வாத்தியார்:—"ஆனால் இதை ஏன் முதலில் சொல்லவில்லை?"

மாணவன்:—சொன்னால் நாளைக்கு இன்னொரு பாடம் படித்துக்கொண்டு வரும்படி சொல்லுவீர்கள்"

---

**சோம்பலில் இன்பம் இல்லை; அனுபவத்திலும் அதிகநேரம் இன்பம் காண முடியாது. ஆசைப்பட்டு அடைய முயல்வதிலேயே இன்பம் உண்டு.**

# மேனாட்டு விழுச் செல்வம்

(போ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

24 ஞானத்தின் முதல்வேலை தன்னை யறிதல்; அன்பின் முதல்வேலை தனக்குத்தான் போதுமானதா யிருத்தல். ரஸ்கின்.

25 சந்தோஷம் அடையச் செய்யாத—நியாயமான வழியில் சந்தோஷம் அடையச் செய்யாத கல்வி எல்லாம் வீணேயாகும். ரஸ்கின்.

26 மனிதர் அனைவருக்கும் மதமாகிய கடிவாளம் தேவை. மரணத்திற்குப் பின் யாதோ என்னும் பயமே மதம். ஜார்ஜ் எலியட்.

27 ஜீவராசிகள் அனைத்திடமும் அன்பு செலுத்தச் செய்வதே உண்மைக் கல்வி; அதுவே ஆனந்த அநுபவம் அளிப்பது. ரஸ்கின்.

28 மனச்சாந்தி பெற இரண்டு காரியங்கள் செய்யவேண்டும்—(1) இன்பமான எண்ணங்களுக்கு உன்னை உறைவிடமாகச் செய்து கொள் (2) குடும்பத்தால் சௌகர்யமும் சந்தோஷமும் உண்டாவதற்காக உழைப்பாயாக. ரஸ்கின்.

29 பிறரைச்சார்ந்து வாழும் செல்வப் பூனையினும் தன்னுணவைத் தானே தேடிக் கொள்ளும் சிறு எலியே சாலச் சிறந்ததாகும். ஜார்ஜ் எலியட்.

30 மனிதனுடைய இரண்டு பெரிய இன்பங்கள்-(1) பிறரை நேசித்தல் (2) பிறரைப்புகழ்தல். மனிதனுடைய இரண்டு பெரிய விருப்பங்கள்—(1) பிறரால் நேசிக்கப்படல் (2) பிறரால் புகழப்படல். ரஸ்கின்.

31 பிறருக்குத் தீங்கிழைக்கத் தூண்டாமல் நமக்கு நேர்ந்த தீங்கை மறைப்பதற்கு மட்டுமே நம்மைத் தூண்டுமானால் கர்வம் தீயதன்று. ஜார்ஜ் எலியட்.

32 ஒரு விஷயத்தைப் பல வாயிலாகப் பார்க்க முடியாத புத்தி குறுகியதாகும். ஜார்ஜ் எலியட்.

33 ஈதலாகிய ஆடம்பரத்தை அறிய வழையா யிருத்தல் வேண்டும். ஜார்ஜ் எலியட்.

34 சோம்பேறிக்கு உயிர்வாழ உரிமைகிடையாது; உயிர் வாழக்கிடைத்தாலும் மணம் செய்யக் கிடையவே கிடையாது. ஜார்ஜ் எலியட்.

35 விரும்புவதைப்பெற முடியாததால் பெற முடிவதை விரும்புவோமாக. ஸ்பானிஷ் பழமொழி.

36 காதல் தனக்காக இன்பம் தேடுவதில்லை, தனக்காகக் கவலைப்படுவதுமில்லை; மற்றொருவருக்காக தன் சௌகரியத்தை உபயோகப் படுத்து

கிறது. நரகவேதனையிலும் சொர்க்க இன்பத்தை அமைத்து விடுகின்றது. ப்ளேக்.

37 மூராணில்லாதிருக்க முயலற்க. உண்மையா யிருக்க மட்டுமே உழைத்திடுக. ஹோம்ஸ்.

38 இவனுக்கு அடிமைக் கையில்லை, உயர்வோம் என்ற ஆசையுமில்லை, தாழ்வோம் என்ற பயமும் கிடையாது. தனத்திற்கு அன்றேனும் தனக்குச் சத்தியமாய்த் தலைவனே. ஒன்று மிலன்-ஆயினும் எல்லாம் உடையான். ஸர் ஹென்றி வோட்டன்.

39 நாம் ஒருவரை அதிகமாக நேசிக்க வேண்டுமானல் அவரிடம் ஒன்றிரண்டு தவறுகள் இருக்கவே வேண்டும். ஹோம்ஸ்.

40 அறம் இதுவென்று அறியாதும், விரும்பியது செய்ய முடியாதும் இருந்தாலும், அறத்தில் ஆசை கொள்வதால், தீமையை எதிர்க்கும் தெய்வீக சக்தியில் நாமும் ஒரு அம்ஸமாவோம். ஜார்ஜ் எலியட்.

41 பல துன்பங்களுக்குப் பிறப்பிடமென்று நான் நகரத்தின் களியாட்டிடங்களை விட்டுவிட்டாலும், இன்னும் என்னைவிட்டு விடமட்டும் கற்றுக் கொள்ள வில்லை. செயின்ட் பேஸில்.

42 தேசத்தைச் சுத்தமாயும் ஜனங்களை அழகாயும் செய்துகொள்வதே கலையின் பிரதமவேலை. ரஸ்கின்.

43 ஒருவனுடைய லக்ஷியம் இதுவென்று அறிந்து விட்டால் பின் அவனைப் பற்றி அறிந்து கொள்ளுதல் கஷ்டமான காரியமன்று. ஹோம்ஸ்.

44 நான் எனக்காக மட்டுமே உள்ள ஆசைகளை வைத்துக்கொள்ளா திருக்க முயலுகின்றேன். ஏனெனில் அவை பிறருக்கு நன்மை பயவா திருக்கலாம். தவிர இப்பொழுதே அவை என்னிடம் அதிகமாக இருக்கின்றன. ஜார்ஜ் எலியட்.

45 கடன்—பசும்புல்லாலும் நறுமலராலும் மூடப்பட்டு மனிதரைத் தன்னை நாடச் செய்யும் படுகுழி. ஜார்ஜ் எலியட்.

46 மணவாழ்க்கையில் இனிமேல் எனக்கு அவளிடம் அன்பிராது என்னும் பயத்தை விட என்னிடம் அவளுக்கு ஒருபொழுதும் அதிக அன்பிராது என்னும் நிச்சயம் பொறுக்கத் தக்கதாகும். ஜார்ஜ் எலியட்.

47 உருவத்தை உடைத்தெறிதல்—அதுவே உண்மையை அடைவதற்குரிய ஒரே வழி. ஹோம்ஸ்.

48 வாழ்வில் ஏற்படும் கஷ்டங்களைக்குறைக்க ஒருவர்க்கொருவர் உதவி செய்து கொள்வதற்கன்றி வேறெதற்காக நாம் உயிர் வாழ்கின்றோம். ஜார்ஜ் எலியட்.

49 வாதங்கள் மூளையின் சிருஷ்டி; ஆனல் அபிப்பிராயங்கள் ஆன்மாவின் அமைப்பு.

50 அன்பையும் அறத்தையும் அஸ்திவாரமாகக் கொண்ட நட்பே மெய் நட்பு. அதுவே அழியாதது ஆகும். ஸவனரோலா.

51 அழகு ஆன்மாவில் அரும்பி ஆக்கைக்கு அமரஒளி அளிக்கின்றது.
ஸவனரோலா.

52 அறத்தில் ஆசையே உண்மைச் சுதந்தரம். பிற ஆசைகளால் பிணிப்புண்டவனுக்குச் சுதந்தரம் ஏது? ஸவனரோலா.

53 அன்பே அனைத்தறன். மனச்சான்றே மாண்புறு வழிகாட்டி.
ஸவனரோலா.

54 குற்றவாளியைக் கண்டிக்கவேண்டாம். குற்றத்தை மட்டுமே கண்டிக்க வேண்டும். கண்டிப்பதோடு அமையாது கருணையும் காட்டவேண்டும். ஒரு நாள் எவ்வளவு குற்றவாளியானாலும் என்றேனும் நீதிநெறி புகுதல் நிச்சயமாதலின். ஸவனரோலா.

55 குற்றமான காரியம் செய்யக் கூசவேண்டியது அவசியமே; ஆனால் பிறர் குறை கூறுவரோ என்று அளவு கடந்த ஜாக்ரதை அமைத்துக் கொள்பவன் அன்புடையவனாக இருக்கலாம். உயர்ந்தோனாக மட்டும் இருக்க முடியாது. பஸ்னட்டார்க்.

56 அயலார்க்கு நன்மை செய்யும் பொழுதுதான் ஆண்டவனை ஸ்துதிப்பதாகக் கூறமுடியும் ஸவனரோலா.

57 அற உணர்ச்சி அளிக்காச் சடங்குகளனைத்தும் அழிக்கத் தக்கவைகளே.
ஸவனரோலா.

58 உன் கடமையைச் செய்ய முயல்க; அப்பொழுது உன் தகுதியை உடனே அறிந்து கொள்வாய். கதே.

59 அயலார்க்கு அன்பு செய்வதில் ஆனந்தம் காண்பவனே உண்மையில் இன்பம் துய்ப்பவன் ஆவான். கதே.

60 ஆசைகளை அடக்க முடியாத ஆன்மசுதந்தரம் அழிவு அளிக்கும். கதே.

61 எதை நாம் அறியவில்லையோ அது நம்முடைய தன்று. கதே.

62 ஒருவன் ஒன்றை உண்மை என்று ஆராய்ந்து உறுதி செய்து விட்டால் அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் அவனுக்கு உண்டு. கதே.

63 நுண்ணறிவு அன்புடன் சேர்ந்து விட்டால் அதனால் அடைய முடியாதது எதுவும் அவனியில் கிடையாது. கதே.

64 பெரியார் பேச்சு அறிவு தரும். பெரியோர் மௌனம் அன்பு பெருக்கும். கதே.

65 நட்பு பழக்கத்தாலேயே வளரும். பழக்கத்தாலேயே நிலைபெறும். கதே.

66 நட்புண்டாக அன்பு மட்டும் போதாது. இலட்சிய ஒற்றுமையும் அவசியம். கதே.

67 பிறர் கர்வத்தை மாற்ற நாம் உபயோகிக்கக்கூடிய மருந்து அன்பு ஒன்றே. கதே.

68 எதைக்குறித்து நாம் நகைக்கின்றேமோ அதைத்தவிர வேறெதுவும் நம் மெய் இயல்பைக் காட்டாது. கதே.

69 நம்மை நாம் வெல்லாத வரை அறம் எதுவும் இல்லை. உழைப்பு வேண்டாத செயலெதுவும் மதித்தற் குரியதன்று. டி மெஸ்டர்

70 எந்தக்காலமும் எனக்குத் துணையாய் நிற்க இறைவனிடம் ஏற்பதாயிருந்தால் முதலில் வேண்டுவது சமயசாந்தி. இரண்டாவது கல்வியிற் சுவை. ஹெர்ஷல்.

71 உண்மை நெறிநின்று சுதந்தரம் பெறுபவனே சுதந்தரன். ஏனையோர் எல்லோரும் அடிமைகளே. கௌப்பர்.

72 ஒருவன் அடிமையான உடன் அவனுடைய நற்குணங்களில் செம்பாதி சிதைக்கப்பட்டு விடுகிறது. ஹோமர்.

73 தாய்நாட்டிற்காகச் சமர் செய்வதே தலைசிறந்த தனிப்பெறும் நற்சகுணமாகும். ஹோமர்.

74 கடமையைச் செய்துவிட்டேன்—அதற்காகக் கடவுளைத் துதிக்கின்றேன். நெல்ஸன்—இறுதிமொழிகள்.

75 செல்வத்திலோ களியாட்டிலோ புகழிலோ பற்றுடையவன் எவனும் ஜனங்களிடம் பற்றுடையவனாகான். எபிக்டெட்டஸ்.

76 விரும்ப வேண்டியவற்றை விரும்பவும் வெறுக்கத் தகுந்தவற்றை வெறுக்கவும் செய்யுமாறு நன்னெறியில் செலுத்தப்படும் அன்பே அறமாகும். ஸெயின்ட் அகஸ்டைன்.

77 உயிர் போகுமுன் பலமுறை இறப்பர் கோழைகள். வீரர்கள் இறப்பது ஒரு முறையே. ஷேக்ஸ்பியர்.

78 மாசற்ற மனம் எளிதில் இறுவதில்லை. ஷேக்ஸ்பியர்.

79 துக்கத்தை அடக்காதே, மொழிந்துவிடு. இல்லை எனில் இருதயத்தை உடைந்து விடச் செய்யும். ஷேக்ஸ்பியர்.

80 "அறிவு"—ஆம், அது நாம் வானுலகு ஏறுதற்குரிய வன் சிறகு. ஷேக்ஸ்பியர்.

81 தலைசுழல்பவன் தரணியும் சுழல்வதாய் எண்ணுகிறான். ஷேக்ஸ்பியர்.

82 நண்பர் குறைகளை மறந்துவிடு. பகைவர் குணங்களை நாடு, அப்படிச் செய்வதில் உனக்கு நன்மை உண்டு. கதே.

83 அறிஞர்க்கு அநேகமாக அனைத்தும் நகையாடற்கு உரியதே; ஆனால் சான்றோர் நகையாடுதல் அரிது. கதே.

84 பரிபூரணமே தேவரை அளக்கும் கோல். பரிபூரணத்தில் பற்றே மனிதரை அளக்கும் கோல். கதே.

85 செய்ய வேண்டியதை அறிவதுபோல் செய்வதும் எளியதானால், வறிஞர் குடிசைகளும் மன்னர் மாளிகைகளாய் விடாவோ. ஷேக்ஸ்பியர்.

86 வாழ்வாகிய வஸ்திரத்தில் எப்பொழுதும் இருவகை நூல் இருக்கும். நன்மை தீமையே அது. ஷேக்ஸ்பியர்.

87 மாறுதல் கண்டவுடன் மாறும் அன்பு அன்பாகாது. ஷேக்ஸ்பியர்.

88 இசை யுணர்ச்சி இல்லாதவனும், இன்னிசையால் இருதயம் இளகாதவனும் துரோகம் தந்திரம் திருட்டு முதலியன செய்யத் தகுந்தவர். ஷேக்ஸ்பியர்.

89 பெயரில் உள்ளது யாது? மல்லிகை மலர்க்கு மாறு பெயரிட்டாலும் மணம் குன்றாது. ஷேக்ஸ்பியர்.

90 வாயில் இனிப்பவை வயிற்றில் புளிக்கும். ஷேக்ஸ்பியர்.

91 மனம் கொண்டது மாளிகை. நரகத்தைச் சொர்க்கமாக்கும், சொர்க்கத்தை நரகமாக்கியும் விடும். மில்டன்.

92 பழிவாங்குதல் முதலில் இனியதே. ஆனால் வெகு சீக்கிரத்தில் தன்னையே கொல்லும் விஷமாய் மாறிவிடும். மில்டன்.

93 அழகிலும் சிறந்தவை ஆண்மையும் அறிவுமே. அவைதாம் உண்மை அழகு உடையன. மில்டன்.

94 புது முறைக்கு இடம் கொடுத்துப் பழயமுறை மறைகின்றது. ஒருநல்ல வழக்கம் உலகைக் கெடுக்காதிருக்க கடவுள் பல வழிகளில் தம் கருத்தை நிறைவேற்றிக் கொள்கின்றார். டெனிஸன்.

95 மனத்தைத் தவிர குறையுள்ளது வேறு இயற்கையில் கிடையாது. அன்பிலாதவரே அங்கவீனர். அறமே அழகு. அழகான மறம் மூலாம் பூசிய சூன்யப்பேழை யாகும். ஷேக்ஸ்பியர்.

96 பொய்மை, கோழமை, கீழ்குலம் மூன்றுமே பெண்கள் பெரிதும் வெறுப்பதாகும். ஷேக்ஸ்பியர்.

97 கருணையால் கண்ணீர் வடிக்கும் முகத்தினும் உண்மை வாய்ந்த முகம் கிடையாது. கண்ணீர் விடுதல்கண்டு ஆநந்திப்பினும் கண்ணீர் விடுதல் எவ்வளவு நலம். ஷேக்ஸ்பியர்.

98 அதிர்ஷ்டம் அடையும் வரை என்னை அறிவிலி என்று அழையற்க.
ஷேக்ஸ்பியர்.

99 கடமையைச் செய்வதே கீர்த்திக்கு வழி. டெனிஸன்.

100 முழுவதும் பொய்யான பொய்யோடு முழுபலத்தோடு போர்புரிய முடியும்; ஆனால் மெய்கலந்த பொய்யோடு போர்புரிதல் கஷ்டமான காரியம்.
டெனிஸன்.

101 ஒருநாளும் காதல் செய்யா திருப்பதினும் ஒரு பொழுதாவது காதல் செய்யாது இழந்து விடல் சிறப்புடைத்து. டெனிஸன்.

102 விழுகின்ற வீட்டை எதிற்கும் மடமையே யாகும். ஷேக்ஸ்பியர்.

103 மனிதர் கவனமாய் வடித்து எடுப்பின் தீமையிலும் நன்மை தெளியலாம். ஷேக்ஸ்பியர்.

104 மனிதனால் இயல்வதெல்லாம் இயற்றத் துணிவேன். அதற்கு அதிகம் செய்யத்துணிபவன் மனிதன் அல்லன். ஷேக்ஸ்பியர்.

105 வறுமையும் மனத்திருப்தியும் போதியபொருள் உடைமையே.
ஷேக்ஸ்பியர்.

106 ஒன்றும் செய்யாது காத்திருப்பவரும் ஊழியம் செய்பவரே. மில்டன்.

107 சமரில் உள்ள வெற்றிக்குக் குறையாத வெற்றி சமாதானத்திலும் உண்டு.
மில்டன்.

108 ஒருமகன் பெற்று அவன் தவறிழைக்கக்காணும் ஒருத்தியைவிட உலகில் அதிக துக்கம் படைத்தவர் யாருமிலர். டெனிஸன்.

109 பழுத்த இலை பச்சை இலையை வெறுக்கின்றது. ஏன்? பச்சை இலை இன்னும் ஒரு நிமிஷநேரம் அதிகமாக மரத்தில் தொங்கு மன்றோ?
டெனிஸன்.

110 நூலறிவு வந்து விடுகின்றது. மெய்ஞானம் வரத்தயங்குகின்றது.
டெனிஸன்.

111 வாய்மை வாய்ந்த வாலிபர் தம்புகழிலும் பெரியோர் பக்தியையே பெரிதும் போற்றுவர்.
டெனிஸன்.

112 உண்மையாளர்க்கு உதவியின் மதிப்பு உதவுவார் மதிப்பு அளவேயாகும்.
டெனிஸன்.

113 நான் இயற்கையையும் சபிப்பதில்லை மரணத்தையும் சபிப்பதில்லை. ஏனெனில் நெறிபிறழ்ந்த தெதுவும் நிலையாது.
டெனிஸன்.

114 அழகு அறம் அறிவு மூன்றும் சகோதரிகள். ஒருவர்க்கொருவர் உழுவலன்புடையார், மனிதர்க்கு உற்றதோழர். ஒருங்கு கூடியே வாழ்வர். விழிநீர் பெருக்காது வேறு பிரித்தல் இயலாது.
டெனிஸன்.

115 பெண்ணே! சுகமான காலத்தில் நிச்சய புத்தியில்லாய். நாணமுடையாய். களிப்படையச் செய்வதும் கஷ்டம். துன்பமும் கவலையும் மார்படைக்கும் காலததில் அவை துடைக்கும் தெய்வமாவாய்.
ஸ்காட்.



மனிதன் பிறந்துள்ளது உண்மையைத் தேடவே. ஆனால் அதை அடையும் பாக்கியம் வேறோர் பெரியசக்திக்கே உண்டு.




# கௌஸல்யா மகாராணியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

நாட்டின் முன்னேற்றம் அதன்கண் வாழும் மக்களின் பேரறிவையும் ஒழுக்கத்தினையுமே அடிப்படையாகக் கொண்டெழுவதென்பது பொதுவான உண்மை. அப்பொதுவுண்மையிலும் அந்நாட்டில் தோன்றும் பெண்மக்களின் நற்குண நல்லொழுக்கங்களே சிறந்த பயன் தருவனவாகும். மக்கள் இனமே தாய் கருப்பத்திலூறி அத்தாய்ப்பாலுண்டு தாயின் தளிர்க்கைகளில் வளர்ந்து தகுதிபெற வேண்டியிருப்பதினால் அறிவுடை நல்லாரிடமே அறிவுடை மக்கள் தோன்றுவதை எதிர்பார்க்க முடியும். இதற்கு எண்ணிறந்த சான்றுகள் உள. எனினும் குறிப்பாக மகா புருஷர்களில் முதலாக வைத்துப் போற்றப்படும் இராமபிரானை ஈன்றெடுத்த தாயாகிய கௌஸல்யா தேவியாரின் இயற்கை மாண்புகளைச் சிறிது ஆராய்வோம். அமுதைப் பிரையிட்டுக் கடைந்தால் வெண்ணெய் எழுவதன்றித் தண்ணீரிற் பிரையிட்டுக் கடைந்தால் வெண்ணெய் புறப்படுவதுண்டோ? உத்தமோத்தமமான சந்ததி பரமதுல்யமான பதிவிரதையின் கருப்பத்திலிருந்து தானே உதிக்கக்கூடும். இராமரின் குணாதிசயங்கள் அவ்வளவையும் அவரைக் கருவுற்ற தாயினிடம் அமைந்திருப்பதைக் காண்கின்றோம். கம்பர் இவ்வருமையை முதலிலிருந்து கடைபோகுமட்டும் நன்கு அமைத்துக் காட்டியுள்ளார். அவற்றுள் சில வருமாறு:—அரசர்க்கரசனாகிப் பெருந்திறல் பெரும்புகழ் பெற்று ஒருவருக்குத தான் மூத்த பட்டத்தரசியாக அமைந்த பெரும்பேறுடையவர் இக் கௌஸல்யா தேவியார். இவரை மணந்த தசரத சக்கரவர்த்தி எக்காரணம் கருதியோ இவர்க்குப் பின்பு பல ஆயிரக்கணக்கான மங்கையர்களை மணம புரிந்தாரென்பது சரித்திர வுண்மை. இவைகளினால் ஒரு சிறு மனமாற்றமும் இன்றிச் சாந்தம் தழைத்த காதலுடன் தனது கணவனை உயிரினும் மேம்படப் போற்றி அன்பும இன்பமும் ததும்பக் குறிப்பின் வழி ஒழுகி வாழ்ந்து வந்தனர் என்பது எவர்க்கும் திகைப்பூட்டுவதாகும்.

---

எத்தனை உயர்ந்தோரை அறிய முடியுமோ அத்தனை உயர்ந்தோரைத் தான் சார்ந்து நிற்பதும், எத்தனை தாழ்ந்தோரை அணுகக் கூடுமோ அத்தனை தாழ்ந்தோர் தன்னைச் சார்ந்து நிற்பதுமே ஆன்மாவின் உண்மையான ஆற்றலாகும்.

கடலனைய அன்பும் புவியனைய பொறையும் உடைய இவரது இயற்கையை எண்ணுந்தோறும், தெய்வப் புலவரின் "பெண்ணிற் பெருந்தக்க யாவுள? கற்பென்னும் திண்மையுண்டாகப் பெறின்" என்னும் பொய்யா மொழி நினைவில் எழுகின்றது. இத்தகைய பெருமித குணத்தின் பிரதி பலிப்பாகவே பின்னர் இவர்பாற் றோன்றிய இராமபிரான் வனம் போகுமாறு சிற்றன்னை பணித்தமாற்றம் கேட்டதும் அப்பொழுதலர்ந்த செந்தாமரையினும் அழகிதாகப் பொலிந்ததெனக் கவியரசர் சித்தரித்துள்ள இடமும்,

"மன்னவன் பணியன்றாகில் நின்பணி மறுப்பனோ?
என்பின்னவன்பெற்ற செல்வம் யான்பெற்ற செல்வமன்றோ?"

என விடையிறுத்ததாகக் காட்டியுள்ள பகுதியும், பொலிவுறுவதாகச் சிந்திப்போர்க்கு விளங்கும்.

பிறகு,

"யாவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன்"

என மாற்றாந்தாயினாலே சிறப்பாகப் பாராட்டப் பெற்ற ஒப்பற்ற தனது தவப் புதல்வன் முடிபுனைவிக்கப்போகும் செய்தியைச் சிலதியரால் செவியுற்றபோது தனது கான்முளை பாராளும் பொறுப்பினை ஏற்கப் போகின்றதாகிய பேறு குறித்தெழுந்த மகிழ்ச்சிப்புனல் பொங்கி யெழுந்ததாயும், அதே தருணத்தில் நாயகனாகிய மன்னர் மன்னன் துறவு மேற்கொண்டு வனம்புகுவாரென்று எழுந்த துன்பவுணர்ச்சியாகிய பெருந்தீ அம்மகிழ்ச்சிப் புனலை வற்றச் செய்ததென்று அரசியாரின் உள்ள நிலையை விளக்கி

"சிறக்கும் செல்வ மகற்கெனச் சிந்தையில்
பிறக்கும் பேருவகைக்கடல் பெட்பற
வறக்கு மாவடவைக்கன லானதால்
துறக்கு மன்னவன் என்னுந் துணுக்கமே."

என்று கவியரசர் காதலனுக்கும், காதல் மைந்தனுக்கும் அன்பில் வேறுபாடறியாத அவ்வரசியாரின் தூயஉள்ளத்தினைப் படம்பிடித்துக் காட்டியிருக்கின்றார். இளமை காரணமாக தம்பதிகளுக்குள் ஏற்படும் பரஸ்பர உணர்ச்சி முதுமைப் பருவத்தில் மறைந்துபோவதும், மக்களின் ஆக்கவளர்ச்சியே தலை சிறந்து நிற்பதும் முதுமகளிரிடை இயல்பாகக் காணலாம். இத்தகைய நிலைமை பொதுவாகுமன்றிச் சிறப்பாகமாட்டாது. கற்பிற் சிறந்தவர்களாயும் விரத சீலைகளாகவும் முற்காலம் விளங்கிய பெருந்தகைப் பெண்பாலர்களிடை இத்தகைய காரணம் கருதாத தூய அன்பே உரம் பெற்றிருந்ததாகும். கேவலம் சிற்றின்ப நுகர்ச்சிக்காகவே சிருஷ்டிக்கப்படும் அன்பு வாழ்விற்கால்கொள்ளாது வீழ்ச்சியுறுதல் கண்கூடே. இருமைக்கும் துணையாகிய கற்புடை மகளிர்க்கும் விலைமாதர்க்கும் உள்ள வேற்றுமை இதுவே யாகும். ஆனால் விலை

---

ஜனங்களின் நன்மை நாடுவதற்குரிய நல்லுணர்ச்சிகளை எழுப்புவதே என் வேலை. அந்த நன்மையை அமைத்துக் கொள்வதற்குரிய வழிகளை வகுப்பதன்று, கவி யுள்ளத்தில் ஜனங்கள்பால் அன்பு எவ்வளவு அதிகமாயிருப்பினும், வழிகளைத் தீர்மானிக்கும் சக்தி உயர்ந்ததாய்க் காண்பது அநேகமாய் அரிது.

மாதரின் இயல்புடைய சிலர் குலமாதரிலும், குலமாதரின் குணப் பண்புடைய சிலர் விலைமாதரிலும் இருக்கின்றனர் என்பதை ஈண்டு குறிப்பிடவேண்டியதும் அவசியமாகும். இதை மறைப்பது உண்மைக்குத் தவறிழைப்பதாகும். இது நிற்க இன்பம் துன்பம் ஆகிய இரண்டுவகை யுணர்ச்சிகளின் இடைப்பட்ட நமதரசியார் கடமை கருதி மனதைத் திடப்படுத்திக்கொண்டு சுபச்செய்தி வழங்கிய மகளிர்க்குப் பண்டை இந்திய மன்னர்களின் முறைப்படி "அரும் பெறலாரமும், நன்னிதிக்குவையும் நனி நல்கி அவர்களை மகிழ்வித்துத் தனது முதற் கடமையாகிய தெய்வ வழிபாட்டினைச் செய்யும் பொருட்டுத் தனக்கு உயிரினுமினிய சுமித்திரை யென்னும் இளைய அரசியொடும் அரண்மனையில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் பாவாசுதேவனைத் தொழுது வணங்கி

"என்வயிற் றருமைந்தற் கினியருள் உன்வயிற்றதென்றான்"

என்று வேண்டியதாகக் கூறப்பட்டுளது.

நான் பெற்ற மகன் என்று எண்ணாமல், என்பால் திருவருள் வரவிடுத்த மைந்தன் எனக்கருதிக் குறிப்பிட்டது அரசியாரின் பேரறிவிற்கும் தெய்வப் பற்றிற்கும் ஓர் அரிய சான்றாகும். நீர்மேற்குமிழியன்ன புன்மைச் செல்வத்தினையும் துய்க்கும் போகத்தினையும் பெரிதாக மதித்திருந்தால் கௌஸல்யா தேவியார் கடவுள் வழிபாடு அந்நிலையில் செய்திருக்கவே வேண்டியதில்லை. இயல்பாகவே ஆண்பாலர்களைவிடப் பெண்பாலார்கட்குத் தெய்வ வழிபாட்டில் பற்று அதிகம் என்பதையும் இது குறிப்பிடுவதாகும்.

பிறகு பலவகைத் தானங்களும் வழங்கி விழாவெடுப்பித்து அரண்மனையில் முன்னுள்ள பெரியோர்களால் தொடங்கி யநுஷ்டிக்கப்பட்டதாகிய (முடிமங்கலம் குறித்து ஆறறப்படும்) நோன்புகள் யாவும் செய்யத் தொடங்கினர் எனக் கவி கூறுகின்றார். மணாளருடையவும் மக்களுடையவும் மேன்மைகளைக் கருதி நோன்பிழைத்து விரதமிருப்பவர்கள் இன்றும் இந்திய மாதர்களே யென்பது வெளிப்படை. இது கொண்டே மனைக்கு விளக்க மடவார் என்றனர் மூதாட்டியாரும்.

பின்னர் முடிமங்கலத்திற்குக் குறித்த நன்னாளும் போந்தது. காலையிலிருந்தே தன் அருந்தவ மைந்தன் பூதேவியை மணந்து அம் மணக்கோலமாகிற முடி, குடை சாமரம் முதலிய சின்னங்கள் பொலிய ஈன்றெடுத்த தாயாகிய தன்னை வந்து வணங்கி ஆசிபெற வருவான் வருவான் என்பதைத் தன்னுள்ளேயே பலகாலும் எண்ணி எண்ணி இன்பந்தழைத்த தாயன்புடன் எதிர்நோக்கியிருக்கின்றார். எதிரில் வந்தெய்தும் ஓர் நிகழ்ச்சி யுண்டெனில் அதையே முற்கூட்டிச் சிந்தித்துக் கொண்டிருப்பது மகளிரின் பிறவிக்குணம். அதைக்கூடக் கம்பர் குறிப்பிடத் தவறினாரில்லை.

இவ்வாறு பேராவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்த பேரரசியாகிய அன்னையார் முன்பு, இராமன் தான் வனம்புக விடையளிக்குமாறும், மன்னர்

---

உலகத்தில் வெகு சிலரே தனியாக வாழத் தகுதி யுடையவர். அவர்களுக்கு உலகத்தின் மாயத்தை அறியப்போதுமான லௌகிக ஞானமும் சகல மாயத்தையும் வெறுத்துத் தள்ளப் போதுமான அறவொழுக்கமும் இருக்க வேண்டும்.

மன்னனின் துன்பந்தீர ஆறுதல் கூறுமாறும் வேண்டும் பொருட்டுப் போதா லாஞர்.

தான் மனதிஞலேயே பாவனை செய்து கண்ட, முடிமங்கலச் சின்னங் கள் எவையுமின்றிச் சாதாரணத் தோற்றத்துடன் வந்து பாதங்களில் வணங் கிய மைந்தனை மனம் குழைந்து வாழ்த்திய பின்னர் படபடப்பின்றி அமைதி யான முறையில்

"நினைந்ததென்? இடையூறுண்டோ? நெடுமுடி புனைதற்கு"

என வினவியதாகக் காட்டிய பகுதி அரசியாரின் அடக்கத்தின் அழகைப் புலப் படுத்துவதாகும்.

உடனே இராமன் இருகரமும் கூப்பித் "தாயே தமது காதல் மைந்த னும், குறைகாண முடியாத குணமுடைய என் தம்பியும் ஆகிய பரதனே முடிசூடுகின்ருன்" எனக் குறிப்பிடுகின்ருர்.

இதனைக் கேட்டதும் அன்னையாகிய கௌஸல்யா தேவியார் திடுக்குற்ரு ரில்லை. வெறுப்புற்ருரு மல்லர். அம்மட்டோ 'நின்னினும் நல்லன் மும்மை யின் நிறைகுணத்தவன" குறைவிலன், எனத் தனது வேற்றுமை யறியாத அன்பிஞல் அங்கீகரித்தனர். உன்னைவிட நல்லவன். யாவரினும் மும்மடங்கு நிறைந்த குணமுடையவஞதலின் அவன் அரசர்க்கரசஞவது தகுதியுடையதே எனப் பாராட்டி, அதனை ஆமோதித்தனர் என்னில் அவர் பெருந்தகையை எவ்வாறு வழுத்துவது? இம்மாதரசியின் கருப்பத்தி லூறிய இராமன் "என் பின்னவன் பெற்ற செல்வம், யான் பெறற செல்வம் அன்ரே?" எனக் கைகே சியிடம் புகன்றதில் வியப்புமுண்டோ?

ஆஞல் பழமை பாராட்டும் குணம் மாதர்கட்குத் தலைசிறந்த தாதலிஞல், முறைமை யன்றென்ப தொன்றுண்டு என மூத்தவனிருக்க இளையவன் முடி சூடுதல் ஆன்ருேர் வழக்கிற் கொத்ததன்று எனவும் எண்ணிஞர். ஆயினும் அவ்வெண்ணம் அரசிற்குரியவஞகிய தன் மகன் மனதில் பதியககூடாதென்று கருதியவர்போல "மன்னவன் ஏவிய, தன்றெனுமை மகனே புனக்கறன், நன்று நும்பிக்கு நானிலம் நீ கொடுத் தொன்றி வாழுதி யூழிபல" என்னும இரண்டு விடயங்களை எடுத்துக்கூறி ஆசி வழங்குகிருர்.

அரசர் கட்டளைப்படி நீ ஒழுகுதல் கடமை யாகுமன்றி முறைமையன் றென்பதை நீ எண்ணுதல் கூடாதென்னும் குறிப்பும் இதஞல் உனது உரிமை புறக்கணிக்கப்பட்டதாக வருந்தாமல் உனதுடைமைப் பொருளாகிய இவ்வா

---

கடவுள் வலது கையில் முழு உண்மையையும், இடது கையில் உண்மை யைத் தேடுவதில் அழியா ஆசையும் வைத்துக்கொண்டு எது வேண்டும் என்று என்னைக் கேட்டால்-இடது கையில் உள்ளதை விரும்பிஞல் என்றும் இருட் டிலேயே இருக்கவேண்டி யிருப்பினும்—நான் இடது கை முன் தலையைத் தாழ்த்தி "தந்தையே, தாரும்; உண்மை உமக்கே உரியது" என்று கூறு வேன். ஏனெனில் மனிதன் உண்மையை அடைவதாலன்றி உண்மையைத் தேடுவதாலேயே பரிபூரணத்துவத்தைத் தன்னிடம் இடைவிடாது வளர்த் துக் கொள்வதற்குரிய தன் சக்திகளை விருத்தி செய்து கொள்கிருன்.

சினை நீயே உன் தம்பிக்கு உவப்பின் அளித்ததாக எண்ணிக்கொடுத்து, இத ஞல் வேறுபடாமல் ஒற்றுமையாகிப் பல பல ஊழிகாலம் உலகம் வியக்க வாழ்வாயாக என்று முடிக்கின்ருர்.

இவ்வாறு முரண்பாடின்றி அரசிழந்ததை ஏற்றுக்கொண்ட அன்னையின் பெருந்தகை யுணர்ச்சியைக்கண்டு பொங்கித் தழைத்த மகிழ்ச்சியுற்றுப் பிறகு வனம்புகுமாறு தனக்கிடப்பட்ட இரண்டாவது கட்டளையை முந்தக் கூறு வது உசிதமன்றெனக் கருதியவர்போல, அன்னையே, மன்னர் மன்னன் என்னை நன்னெறியிற் செலுத்தும் எண்ணத்தினுல் ஏவிய ஓர் கட்டளையுண்டு எனக் குறிப்பிடுகின்ருர். அதுகேட்ட அன்னையார் ஈண்டுரைத்த பணி யென்னை? இப்போது உனக்கு அவ்வாறு இடப்பட்ட கட்டளை யாது? என வினவவே, இனி மறைத்துரையாட இடமின்றிப் பதினுன்கு வருடம் என் பது அதிக வருடங்களாக மனதிற்படுமோ? என்றஞ்சி, 'ஏழிரண்டேழு' ஆண்டு கள் வனவாசிகளான தவசிரேஷ்டர்களுடன் அளவளாவிப் பின்பு திரும்பவும் நீ வருதல் வேண்டுமென்றும் கூறியுள்ளார் எனத் தந்தைமீது தாய் மனதில் வருத்தம் எழாவண்ணம் புகல்கின்ருர்.

"அரச செல்வத்தை ஒரு பொருளாக மதியாமல் ஐயன் ஆணைப்படி நட" என ஆண்மையோடும் அறிவுறுத்திய இவ்வரசியார் தமது செல்வச் சிறுவன் சகல சுகங்களையும் துறந்து வனவாழ்க்கையை மேற்கொள்ள ஏற்பட்டது அர சர் கட்டளை யெனக் கேட்டபோது அச் சொல்லாகிய அனல் தனதிரு செவி வழிப் படர்ந்து உள்ளத்தைச் சுட உணர்வு கலங்கித் தரியாது வெதும்பி மெலிந்து வீழ்ந்து கரைகின்ருர்.

அரசர் முடிசூட்டுவதாக மொழிந்தது வஞ்சமா யிருக்குமோ என்றெண் ணியும், ஆதிமுதல் அரசர்மாட்டு நான் ஒழுகிவந்த பணிவிற்கு அவர் என் பாற் பெய்த கருணை மிகமிக நன்று நன்று என விம்மியும், அன்புருவாகிய தந்தை இவ்வாறு மனம் பேதிக்க நீ யாது குற்றம் புரிந்தனை? என வினவியும் பலபட இரங்குகின்ருர். இதுகண்ட மைந்தன்,

> "இத்திறத்தின் இடருறுவாள் தனைக்
> கைத்தலத்தி னெடுத்து அருங் கற்பினேய்
> பொய்த்திறத்தின ஞக்குதியோ புகல்
> மெய்த்திறத்து நம் வேந்தனை நீ"

என்று குறிப்பினுல் அரசர் அன்புமாறினுரல்லர், வாய்மையின் வழி நிற்பவராத லால் இது நிகழ்ந்தது, அரசர் உள்ளம் வருந்தவோ அவர் நல்லெண்ணத்தில் ஐயப்பாடு கொள்ளவோ சிறிதும் இடமில்லை யெனப் புகல்கின்ருர்.

மெய்த் திறத்து வேந்தன் எனவும், (வரம்பெற்ற கைகேயிக்கல்லாது) நம் வேந்தன் எனவும் தனித்தனி அமைததுக்கொள்ளின் மேலேகுறித்த கருத்து விளங்குவது காணலாம், அதினும் நீ என்றது மிகமிக ஆழமுடையதாகும்.

ஒப்பாரு மிக்காருமில்லாத அரிய கற்பரசியாக விளங்கிய நீயோ கணவன் உரையைப் பொய்யாக்கலாம்? என்பதே உட்குறிப்பு. மனிதப் பிறவியின் மாட்

---

மெய்ஞ்ஞானம் "கடவுளிடம் அடக்கம்—ஜீவர்களிடம் அன்பு—தன்னிடம் அறிவு—உண்டாக்கும்.

சியே சுயநலத்தியாகம், பெற்றோரைப் புனித மாக்குதல். இவ்விரண்டினையும் இவ்விருகட்டளைகளின் மூலம் பெற்றேன். இதனைவிடப் பிறப்பினு லெய்தும் பெரும் பயன் உளதோ? எனத் தனது ஞானவாசிஷ்ட சிரவணபோதம் வெளிப்படப் பலவகை அறமொழிகளால் அன்னையைத் தேற்றியதுடன் எவ் வாற்றானும் தான் நாடு நீங்குவது உறுதி என்பதை அன்னை யுணரும்படி

"விண்ணு மண்ணும் இவ்வேலையு மற்றும்வே
றெண்ணும் பூதமெலாம் இறந்தேகினும்
அண்ண லாணைமறக்க அடியனேற்—கொண்ணுமே?"

என முடித்துக் காட்டுகின்றார். இதுகேட்ட பின்னர் வேறு செயல் காணாத அவ்வம்மையார்,

ஆகில் ஐய அரசன்றனது ஆணையை யிகழ்ந்து வனம் செல்லாதொழிக என யானும் கூறவில்லை. துன்பத்தைச் சகிக்கவு முடியாமல் இறக்கவும் முடியாமல் தளரும் என்னையும் உன்னுடன் அழைத்துச் செல்லுவாயாக என இரங்கி வேண்டுகின்றார்.

பத்தினிக் கடவுள் என இவரையன்றோ பகர்தல் வேண்டும். நீதிக்கு எவ்வளவு கீழ்ப்படிகின்றார். துன்பத்தினை எவ்வண்ணம் சகிக்கின்றார். பொறையைப் பெண்பா லினமாகப் பெரியோர் வகுத்ததற்கு இவரன்றோ சான்று?

அவ்வேண்டுகோளையு மறுத்து, என்னைப்பிரிந்து பிரிவெனும் துன்பக் கடலில் (நிரந்தரமாக) நிலைபெறப் போகிற அரசர்க் கரசராகிய நின்பதியை உடனிருந்து ஆற்றி யுபசரிக்க வேண்டிய கடமையைத் தவிர்த்து, என்னுடன் கானகம்புகுத எண்ணலாமோ? தாயே ஸ்திரீ தர்ம சாஸ்திரங்களை நீ படித் தறிந்தது மில்லையோ? எனவும் பாதன் அரசுரிமை யேற்று, மன்னன் வானப் பிரஸ்தாச்சிரம வாழ்வு மேற்கொள்ளுங்கால் உடனிருந்து அருமையான நோன்புக ளாற்றுதல் கடமை, நான் பதினான்கு ஆண்டுகள் என்பதைப் பதி னான்கு பகற்பொழுதாகப் போக்கி சுகமாகத திரும்புவேன் எனப் பற்பல வகையிலும் போதல் உறுதி யென்பதை யுணருமாறு கூறுதல் கேட்ட அன்னை மைந்தனது மனவுறுதி மாற்றமுடியா தென்பதை யுணர்ந்து, இவனுக்கு இக் கட்டளையிட்ட புவனேசுவரனிடம் சென்றாவது நமஸ்கரித்து இரந்து இவன் தவசியாகி வனம் புகுதாதபடி தடுக்கின்றேன் எனத் தன்னுள் கருதி அரண் மனை நீங்கி அரசர்க்கரசன் அவசமுற்றுத் துன்பச் சேக்கையிற்கிடக்கும் கைகேயியின் கிருகத்தை நாடிச் செல்கிறார். அவ்விறுதியிலும்கூட நாயகனைச் சினந்தோ, வெறுத்தோ வன்சொல் புகன்றாரில்லை. இவ்வாறு கட்டளை யளித்த கணவனிடம் மனைவி யென்னும் உரிமைபற்றி வாதாடியாவது உத்தி ரவை மாற்றும்படி முயல்வேன் என்றும் எண்ணியதாகக் கவி கூறினாரில்லை. "புவனிநாதனைத் தொழுது, மைந்தன் அரசுரிமையின்றி நாட்டில் வசிக்கும் படியாவது வேண்டி வரம் பெறுகிறேன்" என்றே எண்ணிச் செல்கின்றார்.

இதை எண்ணும்போது வன்மையை அன்பினாலேயே வெல்லலாம் அல் லது எதிர்வாதினால் வெல்ல முடியாதென நமது கலியுக வாதராகிய காந்தி

---

வாழ்வு பொதுவாக மனிதர்க்கு நன்மையே யாயினும் பலர்க்கு நன்மை யாவது சந்தேகம், சிலர்க்கு நன்மையே யன்று.

யடிகள் போதிக்கும் உண்மை உபதேசமே யென்று நன்கு புலனுகின்ற தன்றே? அறிவுடைய மாந்தர்க்கெல்லாம் சகிப்புத்தன்மையே ஆண்மை யாகும், இன்சொல்லே எறும்வலி ஆயுதமாகும், அன்பே உடல் வன்மை யாகும். இவ்வினத்திற் சேர்ந்தவர் நமது கௌஸல்யா தேவியா ரென்பது இவர் நடையினுல் நன்கு விளங்குகின்றது. குசம் என்பது வடமொழியில் தருப்பையைக் குறிக்கும். அந்தத் தருப்பையின் நுனி அதிக கூரியதா யிருக்கும். அதையொத்த புத்திகூர்மையை யுடையவர் அரசியார் என்பது அவரது கௌஸலை என்னும் பெயரிலேயே அமைந்த ஓர் நுண் பொருளு மாகும். கோஸல தேசத்தரசி யென்பது தெளிந்த பொருளாகும். பிந்தியதை விட முந்திய பொருளே மிகமிகப் பொருத்தமென அறிஞர் இன்புறுவர்.

இனி இவ்வாறு மாற்றாளின் மாளிகையை யடைந்து உள்ளே சென்று அரசர்க்கரசன் உயிரின்றி மாண்டார்போல உணர்விழந்து கிடப்பதைக் கண் டார். கண்டதும் மைந்தனைப்பற்றித் தாம் எண்ணிவந்த எண்ணமெல்லாம் மறைந்தது. உயிர் நீங்கியபோது உடல் எவ்வாறு கீழே விழுமோ, அவ்வாறு அரசர்க் கருகில் வீழ்ந்து தம்மை மறந்தார். எதிர்பாராது கண்ட இவ் விபத்திற்குக் காரணம் உணரமுடியாமல் அரசர் உயிர் இழந்தார் என்றே துணிந்து வாய்திறந்து ஆற்றுது கதறுகின்றூர். மனமுடைந்து வாய்விட் டலறும் பெரிய மகிஷியின் அழுகை யொலியைக்கேட்ட அரசவையின்கண் இருந்த வசிஷ்ட முனிவர் முதலான அரசர் குழாங்களும் துணுக்குற்று விட யம் யாதென்றுணரும்பொருட்டு கைகேயியின் மாளிகையுற்றனர். குலகுரு வாகிய முனிவர் கூர்ந்துநோக்கி, உயிர் உண்டென் றுணர்ந்து நினைவிழந்த காரணம் உணர முற்படுகின்றூர். பின்னர் கைகேயியை வசிஷ்டர் வினவ உண்மை வெளியாகிறது. மாற்றுள் வரம்பெற்ற விவரமும், அரசன் புத்தி ரன் பிரிவெண்ணி அவசமுற்றமையும் குறிப்பால் உணர்ந்துகொள்கின்றூர். அவ்வாறுணர்ந்த பிறகும், கடுமொழி ஒன்றும் கூறினுரில்லை. மாற்றுளை நோக்கி ஏதும் சினந்தாரில்லை. நாயகன் உயிர்பெற் றெழுந்தால்போதுமென நாட்டத்துடன் தேறுதல் உண்டாகும்படி,

"மகனைத் திரிவா னென்றூள். மைந்தன் வனம்புகாமல் மீள்வான் என்று புகல்கின்றூர். ஆனுல் அவ்வெண்ணத்துடன் அரசன் சத்தியம் தவறி னுன் என்று உலகம் கூறுமே என்னும் அச்சமும் அவர் உள்ளத் தெழுந்த" தென்றூர் கவியரசர். என்னே, உலகம் பழிக்குமே யென்னும் அச்சம் புதல் வன் பிரிவினுல் விளையும் துன்பத்தைக்காட்டிலும் மேலோங்கி நின்றது. குடிகள்பொருட்டு அரசரேயன்றி அரசர்பொருட்டுக் குடிகள் அல்ல வென் பதை அந்தப்புர வாஸத்திலிருந்த ஓர் அரசியார் நினைவுறுகின்றூர் எனில் அஞ் ஞான்று அரசநீதி எத்தகையதா யிருக்குமென்பதை விளக்கவும் வேண்டுமோ? பெண்களால் குடும்பக் கலகம் நிகழ்வது கண்கூடென்பர். இச்சொல் நிகழ காலத்து நிலைதான். தான் என்னும் முனைப்பறுக்கும் அடக்கமான பயிற்சி யும், பேறறிவளிக்கும் கல்வியும், ஒழுக்கப்பற்றும் உள்ள பெண்களிடைக் கலாம் எவ்வாறு விளையும் என்பதற்கு இவர் பொறையே சான்றூகும்.

(தொடரும்)

---

"வினைப்பயன்" என்பதைப் பிறர் விஷயத்தில் நம்பியும் தம் விஷயத் தில் நம்பாமலும் இருக்கக் கூடுமானுல் அது பெரும் பாக்கியமாகும்.






# ரோமானியர் பிரிட்டனை ஜெயித்தது.



(T. S. ராஜகோபாலன் B. A. L. T.)

(293-ம் பக்கத் தொடர்ச்சி.)

முந்தின கதையில் ஆதி பிரிட்டானியருடைய விவரங்களை உலகத்தாருக்கு எடுத்துரைத்த ஜூலியஸ் ஸீஸர் ரோமானிய தளகர்த்தர் என்று சொல்லப்பட்டது. சுமார் கி. மு. முதலாவது நூற்றாண்டில் ஐரோப்பாவில் நாகரிகம் அடைந்திருந்தவர்கள் ரோமானியர். இடலி தேசத்திலிருக்கும் ரோம் நகர ஜனங்கள் ரோமனியர் எனப் பெயர் படைத்தனர். இந்த ரோமானியர் ஆதியில் குடியரசு ஆட்சி முறையில் விருப்பங்கொண்டு அரசனுடைய ஆதிக்கமான முடியரசை ஒழித்தவர்கள். குடியரசு ஸ்தாபித்த பின்னர் தங்கள் ராஜ்யத்தைப் பரப்புவதற்காகப் பாடுபட்டனர்.

அந்த ரோமானிய குடியரசின் சார்பாகச் சாம்ராஜ்யத்தைப் பெருக்க ரோமானிய தேசாபிமானிகள் முனைந்து, அந்த வேலையை ரோமானிய பிரஜைகளுக்குள் அக்காலத்தில் வீரர்களான, ஜூலியஸ் ஸீஸர் என்பவர் இடலி தேசத்திற்கு மேற்கிலுள்ள ஸ்பெயின், ஸ்விட்ஸர்லந்து, வடமேற்கு ஆபிரிக்கா முதலிய பாகங்களையும், பாம்ப்பே (Pompey) என்பவர் இடலிக்குக் கிழக்கேயுள்ள தற்காலத்திய பால்கன் தீபகல்பம், ஆசியாமைனர், வடகிழக்கு ஆபரிக்கா முதலிய பாகங்களையும் ஜெயிக்கச் சென்றனர். அப்படியே ஜெயித்து உலகத்தாருக்குத் தெரிந்த பாகங்கள் என்று சொல்லப்பட்ட "மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள பிரதேசங்களை" யெல்லாம் ஜெயித்துக் கொண்டார்கள். கிணற்றுத் தவளையைப்போல, அந்தப் பிரதேசங்களே உலகிலுள்ளவை என்று அவர்கள் நினைத்து, அவைகளுக்கு மத்தியிலுள்ள கடலை "மத்திய தரைக் கடல்" என்று பெயரிட்டிருந்தனர். (ஆனாலும் இந்தியா என்றொரு பொன் விளையும் நாடு—நாகரிகப் பொருள்களான தந்தம், முத்து, வைரம, சந்தனம், மயிலிறகு முதலியன ஏராளமாய்க் கிடைக்கும் நாடு இருந்ததென அறிந்து அதனுடன் வியாபாரப் போக்கு வரவு வைத்துக்கொண்டு ஏராளமான தங்க நாணயங்களை இந்தியாவுக்கு அனுப்பிவந்தார்கள் என்பது சரித்திர உண்மை. அது ஆதாரபூர்வமானது.)

இடலிக்கு மேற்குப் பாகத்தில் சென்ற ஜூலியஸ் ஸீஸர் தற்காலத்திய ஸ்பெயினையும் ஜெயித்துக் கொண்டு அப்போது கால் (Gaul) என வழங்கிய பிரான்ஸையும் ஜெயித்து ஒருவாறு "உலகத்தில் இனி ஜெயிக்க வேண்டிய

நாடு இல்லை" என மகிழ்ந்தபோது தான், நீலச்சாயதாரிகளான பிரிட்டானியரைச் கண்டு, சைகையால் பேசி, தாமும் அறியாததொரு தேசம் தற்காலத்திய இங்கிலீஷ் கால்வாய்க்கு வடபுறம் இருப்பதாய் கி. மு. 57-ல் அறிந்தார். "ஆசைக்கோரளவில்லை அகிலமெலாம் கட்டியாளினும் கடல்மீதினிலே ஆணை செலவே நினைப்பர்" என்ற தாயுமானுர் வாக்குப்படி சாம்ராஜ்யம் பிடிக்கும் வெறிபிடித்த ஸீஸர் கி. மு. 56-ல் மாரி காலத்தில் பிரிட்டன் தேசத்திற்கு வீரர்களைக் கப்பல்களில் அழைத்துச் சென்றுர். ஆபத்துக் காலத்தில் ஒன்று சேரும் பிரிட்டானியத் தலைவர்கள் பலரும் ஒருவாறு சேர்ந்து சண்டையிட்டுத் துரத்தி ரொமானிய வீரர்களைத் திருப்பியடித்தனர்.

திருப்பியடிக்கப்பப்பட்ட ஜூலியஸ் ஸீஸர், கால்தேசத்திற்குத் திரும்பி மாரிகாலத்தைக் கழித்து மறுவருடமான கி. மு. 55 கோடை காலத்தில் அதிகமான வீரர்களைச் சேர்த்துக்கொண்டு, நீலச் சாயத்தையும், எலும்புகளையும், கோரஸ்வரூபத்தையும் தம் வீரர்கள் கண்டு வெருண்டுவிடாதபடி தைரியப்படுத்திக் கூட்டிச் சென்றுர். முதலில் ரொமானியர்கள் சென்றுவிட்டதைக் கண்ட பிரிட்டானியர் வழக்கப்படி பிரிந்து, தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டு போய்விட்டனர். "ஊர் இரண்டுபடின் கூத்தாடிக் கெளிது" என்றபடி ஸீஸருக்கு காரியம் கஷ்டமில்லாமல் முடிந்தது! பிரிட்டானியர் தலைவர்களுள் ஒருவரான காஸிவ்லானஸ் என்பவர் எவ்வளவோ தீரத்துடன் சண்டை செய்து ரொமானியரைத் திடுக்கிடச் செய்தார். ஆனல் அவரிடம் பொறாமை கொண்ட உள்நாட்டு விரோதக் கூட்டத்தினர் ஒரு சாரார் வெற்றிச் சமயத்தில் அவரைப் பிடித்து ஸீஸரிடம் கொடுத்துவிட்டனர்! அதனல் ஒருவாறு ஸீஸர் வென்றதாக ஒப்புக்கொள்ளப்பட்டுச் சமாதானம் ஏற்பட்டது. ஆயினும் ரொமானியரைக் கூடியவரை எதிர்த்துப் போராடினர் பிரிட்டானியர்! ஜெயித்ததாகப் பெயர்பெற்ற ஜூலியஸ் ரொமானிய சாம்ராஜ்யத்தின் பிரதிநிதிகளாகச் சிலரை நியமித்து, அவர்களுக்குக் கப்பம் கட்டும்படி பிரிட்டானிய குடித் தலைவர்கள் பலரையும் திட்டம் செய்துவிட்டு ஜெயபேரிகை, வெற்றிக் கொடியுடன் ரோமாபுரிக்குத் திரும்பிவிட்டார்.

ஏனெனில் கீழைப் பிரதேசங்களை ஜெயிக்கச் சென்ற பாம்ப்பே, திரும்பித் தமக்கு விரோதமாக ஜனங்களைத் தூண்டிவந்தார் என ஸீஸர் அறிந்தார். ஆகவே அவசர அவசரமாய்த் திரும்பிய ஸீஸர், அங்கே தாம் சந்தேகப்பட்டபடியே நிலைமையிருந்ததைக் கண்டு தம் சாமர்த்தியத்தால் ஜெயம் பெற்றுர். ஆயினுமென்ன? விரோதிகள் ஒன்று சேர்ந்து ஸீஸரை "பேராசைக்காரர்! குடியரசைக் கவிழ்த்துத் தாமே சக்ரவர்த்தியாகி ஜனங்களின் உரிமைகளை மிதித்துத்தள்ள முயலுகிறுர்" என்ற வதந்தியைக் கிளப்பி, பொதுஜனக் கூட்டம் கூடுமிடத்தில் குத்திக்கொன்று போட்டனர்! உடனே ஸீஸரைச் சேர்ந்தவர்களுக்கும் எதிர் கக்ஷியினருக்கும் சச்சரவுகள் நீடித்து நடந்து குழப்பம் உள்நாட்டிலேயே ஏற்பட்டதால், தூரத்திலிருந்த பிரிட்டனைப்பற்றியும் பிரிட்டனில் விட்டுவரப்பட்ட ரொமானியப் பிரதிநிதிகளைப்பற்றியும் சிந்திப்பவரோ, கவனிப்பவரோ ரோமாபுரியில் இல்லை. ஆகவே பிரிட்டனிலுள்ள பிரதிநிதிகள் அடக்குவாரற்ற தான்தோன்றித் தம்பிரான்களாய் நடக்கத் தொடங்கினர்.

காரணம் என்னவெனில், பிரிட்டானிய குடித்தலைவர்களில் பலர் தங்களுடைய ஸ்வாதீனமிழந்த நிலையில் வெட்கப்பட்டவர்களாயும், ரோஷப்பட்ட

வர்களாயும், பிரிட்டானியர்களை அன்னியராட்சியினின்றும் விடுவிக்க முயன்ற வர்களாயும் இருந்து அப்போதப்போது கலகங்களும் சச்சரவுகளும் செய்யலானூர்கள். ஆட்சியில் அதிருப்தி கொண்ட தலைவர்கள் இயக்கம் தோன்றியதும், அதைத்தடுக்க ஆளுபவர் முழுபலத்தையும் உபயோகித்தலும், அதன் பலனாக இயக்கம் வலுப்பதும், இப்படியே அதிகமான கஷ்டங்கள் தோன்றுவதும் சகஜம். மேலும் அந்தக்காலத்தில் பிரிட்டானியர் போராயுதங்களைக் கொண்டு சரியான யுத்த முறைகளையே அனுஷ்டித்தார்களானதால் ஆளுபவரும் தங்களுடைய முழுபலத்தின் தன்மையையும் அழுக்தக்காட்டிப் பல தலைவர்களை யுத்தகளத்தில் கொன்று வீழ்த்தி அவர்களுடைய நிலங்களையும் சொத்துக்களையும் பறிமுதல் செய்துகொண்டனர். வேறு சிலர் ரோமானியரின் கொடுஞ் செய்கைகளுக் கஞ்சியவர்களாய் மேற்கிலுள்ள மலைநாடுகளுக்கு ஓடிவிட்டனர். எஞ்சிய அதிக சொத்துகள் படைத்த சில குடித்தலைவர்கள், ரோமானியருக் கடங்கி, சுதந்தரமிழந்து, கப்பங்கட்ட ஒப்புக்கொண்டு வாழ்ந்து வரவும் சம்மதித்தனர்.

இவ்வாருகப் பல குடித்தலைவர்களான சிற்றரசர்கள் மடங்கவே, சாம்ராஜ்யத்தின் பிரதிநிதிகளுக்கு அதிக ஆசையும், அகங்காரமும், தன்னுதிக்கத்தில் இச்சையும் வரவரப் பெருகலாயின. எந்த வழிகளிலும் ராஜ்யத்தைப் பெருக்கவும், லாபம் பெறவும் கொள்ளைகளடிக்கவும் தலைப்பட்டனர். இதைக் கண்டு பொருத பிரிட்டானியத் தலைவர்கள் பொறுத்துப் பொறுத்துத் தாங்காமல் பொங்கி எழுவதும், பலவித அடக்கு முறைகள் கையாளப்படுவதுமே தொழிலாக சுமார் நூறு வருடங்கள் வரை பிரிட்டனில் இருந்தது. இந்த நிலைமையை வருணித்தல் தேவையில்லை. அந்த நிலையை விளக்க, "ஒரு பானைச்சோற்றுக்கு ஒரு அரிசியே பதம் பார்ப்பதைப்போல்" உள்ள வீரமாது பொடீஷியாவின் சரித்திரம் அடுத்த கதையில் சொல்லப்படும். (அதைப் படிப்பதினின்றும் அடக்கு முறையின் சாதாரணத்தன்மை தெளிவாக விளங்கும்.

"எவ்வளவு நன்மைப்பயக்கினும் அந்நிய ஆட்சி சுதேச மக்களுக்கு உதவாது" மஹாத்மாகாந்தி.

---

## மிருக ஆட்சியை வேரறுத்த வீரராணி பொடீஷியா

ஜூலியஸ் ஸீஸர் இறந்த பின்னர் ரோமில் நிர்ணயமான ஆட்சி முறை நிலைக்கத் தாமதம் ஏற்பட்டதனுல் பிரிட்டனிலிருந்த பிரதிநிதிகள் அடக்குவாரற்ற காலிகளாய் தங்கள் சாம்ராஜ்ய விளையாட்டுக்களை நடத்த வாரம்பித்தனர். அதில் தாங்காத பல பிரிட்டானிய தலைவர் பொருது இறந்தனர். அவர்களுடைய பிரதேசங்களை ரோமானியர் பங்கிட்டுக் கொண்டனர். மற்றும் சிலர் "கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டினும் கடும்புலிவாழுங் காடு நன்றே" என்றபடி மலைப்பிரதேசங்களுக்கு ஓடினர். வேறு பலர் விதியை நொந்து காலத்தின் கொடுமையால் ரோமானியப் பிரதிநிதிகளுக் கடங்கி, கப்பங்கட்டி, வாய்மூடி, கைகட்டி மனம் புழுங்கிக் கிடந்தனர்!

இம்மாதிரிக் கப்பங்கட்டி வந்த பிரிட்டானியர் குடித்தலைவர்களில் ஐஸனி குடிகளின் தலைவன் ஒருவன். அவனுடைய குடிஜனங்கள் அப்போது தற்பொழுதைய நார்போக், ஸப்போக் மாகாணங்களில்

பரவி யிருந்தனர். அவன் உயிருடனிருந்த காலத்திலேயே அனுபவித்த இன்னல்கள் பல. ஆக அவன் இறக்குங்காலத்தில் ஆளுபவரின் அருங் குண மறிந்தவனுய், தன் நாட்டில் ஒரு பகுதியை ரொமானியருக்கும், மீதி யைத் தன் மனைவி இருபெண்களுக்குமாகப் பிரித்து வைத்துவிட்டு இறந் தான். ஏனெனில், தன் மனைமக்களைச் சரியாய் நடத்தி வருவதற்கும் அதற் குக் கூலிக்குமாக அவர்களுக்கு நிலங் கொடுத்திருந்தான். ஆனுல் ''அளகே சன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும் நேசித்து ரசவாத வித்தைக்கே யலைவது'' போல், ருசிகண்ட பூனைகளாக, பொடீஷியா என்ற அந்தக் கைம் பெண் ராணிக்கும் அவள் மக்களுக்கும் ஏற்பட்ட வரும்படி வீதத்தைக் கொடாது கைப்பற்றினர் ரொமானிய பிரதிநிதிச் சிங்கங்கள்! நிரம்பக் கஷ் டப்பட்ட பேதையரான பெண்கள் பல தடவைகளிலும் வணங்கித் தங்கள் குறைகளையும் தங்கள் கஷ்டங்களையும் எடுத்துரைத்தனர். அதிகாரச் செருக் குப் பிடித்தவர்களுக்குப் பணிந்தவர்களிடம் மதிப்பு ஏற்படுவது இயற்கை யல்ல வன்றே?

ரொமானியத்தலைவன் அவர்களை ஏளனம் செய்வதும், துரத்துவதும், கோபிப்பதுமாய் இம்சித்து வந்தான். நாளடைவில் படிப்படியாய் திமிர் அதிகம் திரும்பி வாய்ச்சவடாலி லிருந்து கையடிகளிலும் இறங்கினுன். தன் மட்டில் எதையும் பொறுத்துக்கொள்ளும் குணமிருந்த பொடீஷியாவுக்கு, தன் அருமை மக்களின் மேல் கைவிழுந்த அளவில், அடங்காத கோபம் பொங்கி யது! அதுதான் தாமதம். தன் குடிஜனங்களிடம் வீரத்துடன் சென்று, அவர்களை ஒன்று கூட்டிப் பின்வருமாறு வீரமொழிகளைப் பொழிந்து அவர் கட்கு ஆத்திரத்தை மூட்டினுள்:—

''ஓ பிரிட்டானியர்களே! உங்கள் வீரம் எங்கே? அடிமைவாழ்வில் வீரியங் குன்றித் தவிக்கின்றீர்களே! நான் உங்கள் ராணியல்லவா? என் மக்கள் உங்கள் அரசிளங் குமரிகளல்லவா? நம்மை ரொமானியர் அடிமைப்படுத்தி யிருக்கின்ற னரே! அடிமைகளாகிய நம்மைக் கேவலம் மிருகங்களுக்கும் கீழாக நடத்து கின்றனரே! ஆதலின் இந்த அடிமை வாழ்வை யகற்றுங்கள். அடிமையாக வாழ்வதிலும் சாவதே நன்றல்லவோ? நம்மை 'ஒட்டாண்டிகளாக ஆக்கியது டன் நம்மானத்தையும் போக்குகின்றனரே! இது உங்களுக்கெல்லாம் ஆகுமா? என் பின்னே வாருங்கள். போர்முனையைப் பாருங்கள். இந்த ரோமானிய ரைப் பூண்டற ஒழிப்போம்! இன்றேல் போர் முனையில் இறந்துபடுவோம்!'' என்று ஆவேசமாகக்கூறி, போர்க்கோலத்துடன் தன் தேரில் ஏறினுள். ''பெண்ணென்ருல் பேயுமிரங்கும்'' என்பது பழமொழி. தங்கள் ராணிக்கும், அவள் மக்களுக்கும் இழைக்கப்பட்ட தீங்குகளையும் அவமானத்தையும் கேட்டு மனம் பொருதவர்களாய்க் குபீரென்று கூட்டங் கூட்டமாகக் கிளம்பினர்.

அவரவர்கள் தங்கள் கையில் கிடைத்த கோடாரி, மண்வெட்டி, கத்தி, வாள், அம்பு முதலியவற்றை எடுத்துக்கொண்டு புறப்பட்டனர் பொடீஷியா வின்பின்னே! சுமார் 20,000 பேருக்கு அதிகமிருக்கலாம். தாங்கள் வெறி பிடித்துச் சென்ற வழியிலகப்பட்ட ரொமானிய ஆண், பெண், குழந்தை, பெரியோர் பலரையும் வெட்டி வீழ்த்தினர். லண்டன் என்ற தலைநகரை நோக்கிச் செல்லுகையில் பிடித்தது ரொமானியரைக் கிலி! அச்சமயம் ரொமா னியப் படைகள் பலவும் ஒன்ருய் இங்கிலந்தின் மேற்பாகத்திலிருந்த ஆங் கிள்வீ தீவை நாசமாக்குவதில் முனைந்திருந்தனர். ஏனெனில் ரொமானியர்

கத்திகளுக்குப் பயந்த ட்ரூயிட்ஸ் என்ற மத குருக்களில் பலர் அங்கு குடியேறி, அங்கிருந்தபடி பிரிட்டானியரைக் குட்டிக் கலகங்கள் செய்யத் தூண்டிவந்தனர். ஆகக் கலகங்களின் மூல ஆதாரவை யழிக்க முயன்றனர். இது தருந்த சந்தர்ப்பம் ஆனதால் பொடிவஸியாவின் உணர்ச்சியிருந்த வீரர்கள் தங்கள் மனங்கொண்டபடி வாளுக்கு விருந்தளித்தனர். ரோமானியருடைய பிரிட்டன் வாழ்வின்காலம் குறுகிவிட்டதோ என்று பயப்படும்படி யிருந்தது.

ஆனால் ஆங்கிள்வி தீவிற்கு அவசரச் செய்தி பறந்து ஓடி, ரோமானியப் பட்டாளங்கள் தங்கள் அழிவேலையினின்றும் திரும்பி வேகமாக வந்தன. பொடிவஸியாவின் வீரர்களை மறித்துக்கொண்டன. பாவம்! பழக்கம்பெற்றுப் பல சண்டைகளில் தேர்ச்சிபெற்ற ரோமானியப் படைகளின் முன்னர், கேவலம் உணர்ச்சிமேலீட்டில் கிளம்பிய, யுத்தப் பயிற்சியற்ற பொடிவஸியாவின் வீரர்களின் யுத்தம் எவ்வாறு நிற்கும்? ரோமானியர் வேண்டியவளவு வஞ்சம் தீர்த்துக்கொண்டனர். பிரிட்டானியரின் இரத்தம் ஆறுய்ப்பெருகி ஓடியது. பலர் ஓட்டம் பிடித்தனர். அபலை பொடிவஸியா கைதியாயினள். ஆயினுமென்ன?

"உற்றவிடத்தில் உயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக்கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந் திறுவதல்லால் பெரும்பாரம் தாங்கில்
தளர்ந்து வளையுமோ தான்"

என்றபடியும் "மானமிழந்து வாழாமை முன்னினிதே" என்றவாறும், வீரம் என்ற பாரந்தாங்கிய பொடிவஸியா, ரோமானியர் கையில், தானும் தன் மக்களும் அகப்பட்டு அவமான மடைவதைக்காட்டிலும் "மான மழியாது உயிர் விடுகை சாலஉறும்" என்று தீர்மானித்து, தானும் விஷமருந்தி, தன் மக்களுக்கும் விஷமருத்திப் பிராணனைத் தியாகம் செய்ய ஏற்பாடு செய்துவிட்டாள்.(இவ்விதமேயன்றோ நமது நாட்டுத் திலகங்கள், கற்பரசிகளை, ராஜபுத்திர ஸ்திரீ ரத்தினங்கள், கணவர்கள் யுத்தத்தில் இறந்தார்கள் என்ற செய்தி தெரிந்ததும், ஒருமிக்க மஞ்சள் உடையுடுத்து "ஜோஹர்" என்னும் தீக்குளியல் நடத்தி மானங்காத்தனர்.)

ஆயினும் பொடிவஸியா எந்தக் கஷ்டத்திற்காக உயிர் துறந்தாளோ அந்தக் கஷ்டம் முடியநேரிட்டு, ரோமானியர் தங்கள் ஆட்சிமுறையின் கேவலத்தை யுணர்ந்து சீர்திருத்தினார்கள். இதற்குள் தலைநகரான ரோமிலும் ஒருவாறு நிலவரம் ஏற்பட்டு, அங்கிருந்து நல்ல உணர்ச்சியுள்ள பிரதிநிதிகள் வரலாயினர். அவர்களில் பலர் மிருக ஆட்சியையும், அடக்குமுறைக் கொடுமைகளையும் ஒழித்து, உயிர்நாடியைமட்டும் வைத்து உறிஞ்சும் சமாதான ஆட்சிமுறையைக் கைக்கொண்டனர். ஒருவாறு சமாதானமும் ஏற்பட்டது. அக்ரிகோலா, ஆபா முதலிய பிரதிநிதிகளும், ஹேட்ரியன்போன்ற சக்ரவர்த்தியும் தங்கள் பெயர் நிலைத்திருக்குமாறு நாட்டின் நலத்தை நாடி ஆண்டதை விளக்க அக்ரிகோலாவின் அணை (Agricola's Dyke), ஆபாவின் அணை (Offa's Dyke), ஹேட்ரியன் சுவர் (Hadrian's wall) என்ற சின்னங்கள் பிரிட்டனில் இந்நாளும் இருக்கின்றனவாம்.

இனி அடுத்தாற்போல், ரோமானியருடைய சமாதானமுறை ஆட்சியில் பிரிட்டானியர் அடைந்த நன்மை தீமைகள் விளங்கும்.




# ஸ்ரீ வேமன சுவாமிகள் பாடல்

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

குறிப்பு:—ஸ்ரீ வேமன சுவாமிகளென்னும் பெரியார் ஆந்திர தேசத்தில் சில நூற்றாண்டுகட்கு முன்னர் வசித்துவந்த ஓர் மகான். இவர் ஆந்திர பாஷையிலருளிச்செய்த பாடல்கள் ஆயிரக்கணக்கானவை அப்பாஷையறிந்தோரால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. சாதி சமய வேற்றுமை முதலிய மூடக் கொள்கைகளை இவர் வெகு அழுத்தமாகக் கண்டிக்கிறார். இப்பாடல்களி னருமையைக்கண்டு ஆங்கிலேயரும் தம் பாஷையில் மொழிபெயர்த்திருக்கின்றனர். ஆகவே, தமிழுலகும் அவற்றின் பயனை நுகர்தல்வேண்டு மென்னு மாவல் எம்மைத் தூண்டியதால் சில பெரியோர்களின் கட்டளைக் கிணங்கி அவற்றைத் தமிழில் வெண்பாக்களாக வெழுதி வெளியிடத் துணிந்தோம். அன்பர்கள் ஊன்றி வாசித்துப் பயனுறக் கோருகிறோம்.

(1) முடிசூடி மண்ணாள முன்னியகன் றாளில்
சடைசூடிக் கானுற்றான் தாசாதி யாதலால்
சிந்தித்தல் நாமொழியத் தெய்வசித் தம்வேறே
சந்ததமு மாகும்வே மா.

(க-து) அயோத்தியா நகரை யரசாண்ட தசரதச் சக்கரவர்த்தி தன்னருமந்த மைந்தனாகிய ஸ்ரீராமச் சந்திரப் பெருமானுக்கு மகுடாபிடேகம் செய்வதற்கென்று நியமித்த நல்லோரையில் சீதாபதி மணிமுடி தரியாது சடைமுடியும் மரவுரியுந் தரித்துக் கானகமேகினன். ஆதலால், எப்பொழுதும் எல்லாக் காரியங்களும் தேவசித்தத்தின்படி நிறைவேறுமேயன்றி, நாம் ஒன்றை யெண்ணுவதாலும் முயல்வதாலும் ஒன்றும் நடை பெறுவதில்லை, "நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்."

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்து—மொன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல்

என்று அவ்வைப் பிராட்டியார் பாடி யுள்ளதையும் நோக்குக.

(2) பொல்லாங்கு ளேசெய்து பொற்பாகத் தாமிக்க
நல்லாரைப் போலே நடிப்பார் புறத்திலே
தேசமறி யாவிடினும் தெய்வ மறியாதோ?
மாசிலபி ராமவே மா.

(அரும்பதவுரை) பொற்பு=அழகு.

(க-து) உலகிற் பிறரறியாதபடி இரகசியமாகப் பல தீச்செயல்களைச் செய்து கொண்டே வெளிக்கு மெத்த உத்தமர்கள்போல் நடித்து யாவரையும் வஞ்சிப்பார்கள். ஒருகால் இவர்களது கூடா நெறியை உலகமறியாதிருக்கலாம். ஆனால், சர்வவியாபியாகிய பகவானுமா அறியமாட்டார்? ஆகவே, 'ஒருவரும் அறியா' ரெனக் கரவடமாகத் தீத்தொழில் செய்யாதிருத்தல் அறிவுடைமையாம்

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலேவ தறிவு.

என்னும் செய்யுளின் கருத்தை இதனோடு இயைக்கை.

(3) ஊர்க்கேணி மொண்ட வுதகத்திற் கோர்பாத
தீர்த்தமெனப் பேரிட்டுச் செய்வார் பிரமைமிக
பாததீர்த்த மென்றதாற் பாங்குடனுண் டாம்பயனென்?
நீதமுட னேதுவே மா.

(அ-ரை)கேணி=கிணறு-உதகம்=ஜலம். பிரமை=மயக்கு.

(க-து) உலகிற் சிலர் பாமரமக்களை ஏமாற்றும் பொருட்டுக் கிணற்று நீரைக் கொணர்ந்து அதற்கு 'சுவாமி பாததீர்த்தம்' என்றோர் பேரிட்டுக் கொடுத்துப் பணம் பறிப்பர். அவர்களு மதனை உண்மையென நம்பிக் குடிப்பர். கிணற்று நீரைச் சுவாமி பாததீர்த்த மென்றெண்ணிக் குடிப்பதனால் உண்டாம் பயன்தான் யாதோ?

(4) நற்குணவான் கல்வி நகத்தளவிற் றாயினும்
வெற்பாகு மன்னான் விழுமியதோர் பண்பினால்
குன்றன்ன வித்தை குணவீன னுக்காமோ
என்றுமிப் பூவில்வே மா.

(அ-ரை) வெற்பு=மலை. விழுமியது=சிறந்தது. பண்பு=குணம்.

(க-து) நல்ல குணவான் கற்ற கல்வி நகத்தள வென்னுமாறு சொற்பமாயினும், அவனது சிறந்த குணத்தால் மலைபோலக் காணப்படும். குணவீ

னன் மலைபோல மிகுந்த கல்வி கற்பினும், அது பெருமை குன்றி ஒன்று மில்லாதே போய்விடும்.

(5) அரிதனக்கு வாய்த்தனளா லந்தப்பூ மாது
அரனுக்கு வாய்த்ததே ஆலால மீதாயின்
ஏவற்கே தாகுமோ ஏவனறி வானுண்மை
மேவிநீ கூறுவே மா.

(அ-ரை) பூமாது=இலக்குமி. ஆலாலம்=விஷம்

(க-து) அரியும் அரனும் சமமானவரேயாயினும் திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் அரிக்கு இலக்குமி கிடைத்தாள்; அரனுக்கு விஷம் கிடைத்தது. இதனுண்மையை யாராயுமிடத்து, மனிதப் பிரயத்தினத்தினால் பயன் சிறிது முண்டாதலில்லை. யார்க்கு எது பிராப்த மாகுமோ யாரறிவார்கள்?

(6) அப்பா பசியென் றகம்வாடிக் கூவினும்
இப்பாரி லோர்பிடிசோ றீயான் பரதேசிக்
கெப்பொருளு மீவான் பாத்தைக் குவப்புடனே
தப்பாம லென்றும்வே மா.

(க-து) இவ்வுலகத்தில் மூடர் பலர் 'அப்பா! பசிக்கிறது' என்று கூவிக் கொண்டு, அகமும் முகமும் வாடிவரும் பரதேசிகளுக்கு மனமுவந்து ஓர் பிடி சோறும் கொடுக்கமாட்டார்கள். அவ்வளவு லோபிகளா யுள்ளவர்களே தாசிகளுக்கும் வேசிகளுக்கும் அவர்கள் வேண்டும் பொருள்களனைத்தையும் இல்லை என்று சொல்லாமல் விருப்பத்துடனீவர். இவர்கள் மடமைதானென்னே!

(7) சூத்திரர்கள் தாழ்ந்தோ ரெனக்கூறித் தூஷிக்கும்
பித்தப் புலைஞரினும் பேசிலிழிந் தோரில்லை
வீந்தபின் னிப்பதகர் மீளா நரகடைவர்
சாந்தவபி ராமவே மா.

(அ-ரை) வீந்தபின்=இறந்தபின். பதகர்=பாவிகள்.

(க-து) சூத்திர ரென்னும் ஜாதியார் இழிவான ஜாதியார் என்று ஒரு சாரார் சொல்லி அவர்களை இழிவாப் பேசுவார்கள். ஆராயுமிடத்து இவ்வாறு ஜாதிபேதங் கற்பித்துக்கொண்டு பிறரைத் தாழ்ந்த ஜாதியாரெனக் கூறித்திரியும் இவர்கள் புலையரினும் கீழ்ப்பட்ட புலையராவர். இவர்கள் இறந்த பின்னர் கொடிய நரகத்தில் வீழ்ந்து துன்புறத்தவறார்.

(8) வெற்புமலை யென்றும் வியன்பாண்டம் சட்டியென்றும்
உப்பே லவணமென் றேதினுமொன் றாகலின்
பாஷை பலவாம் பரம்பொருளொன் றல்லவோ?
மாசிலபி ராமவே மா.

(அ-ரை) வெற்பு=மலை.

(க-து) ஒரு பொருள் பல பெயர்களா லழைக்கப்படும். உதாரணமாக: மலையை வெற்பு என்றும் அசலம் என்றும் ஓங்கல் என்றும் பல பெயர்களாலும், மட்பாண்டத்தைச் சட்டி என்றும் பானை என்றும் பல பெயர்களாலும், உப்பை லவணம் முதலிய பல பெயர்களாலும் அழைப்பர். இவ்வாறே வெவ்வேறு பாஷைகளாலும் வெவ்வேறு பெயரிட்டழைப்பர். பாஷையும் பதங்களும் வெவ்வேறாக விருப்பினும் பொருளொன்றே யன்றி பலவன்று. அப்படியே பல பெயர்களால் அழைக்கப்படினும் கடவுள் ஒருவரே யென்றறிந்து ஒழுகுதல் வேண்டும்.

(9) இத்தனைகு லத்துள்ளு மெக்குலம் முக்கியம்
வித்தை யுடையோர்தா மேற்குலத்தோ ராவரே
வித்தையிலா ரெக்குலத்து மேவினென் கீழாங்கு
லத்தவரே யாவார்வே மா.

(அ-ரை) வித்தை=ஞானம்.

(க-து) எத்தனையோ ஜாதிகள் கணக்கற்றுக் காணக் கிடக்கின்றன. ஒவ்வொரு ஜாதியினரும் தத்தம் குலமே சிறந்ததெனக் கூறுவர். இது பெரும் மூடத்தனமே யாகும். ஞானமுடையவ னெவனோ அவனே உயர் குலத்தோனுவன், மேலானதாகக் கருதப்படும் குலத்துப் பிறந்தோனேனும் ஞானமில்லாதவன் இழி குலத்தவனே யாவன். ஆகையால் ஜாதியால் உயர்வாக வேண்டுமென விரும்புவோர் எப்பாடு பட்டேனும் ஞானத்தைச் சம்பாதிக்கக் கடவர்.

கல்லா வொருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.
எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பார்
நாற்பாற் குலத்தில் மேற்பா லொருவன்
கற்றில னாயின் கீழிருப்பவனே.

என்னும் செய்யுள்களின் கருத்தை ஒருவாறு தழுவிய திப் பாடல்.

(10) அஞ்ஞான மேசூத்தி ரத்தன்மை யாமெனவும்
சுஞ்ஞான மேபிரம மென்றுமறை சொல்லுங்காண்
அஞ்ஞான நீக்கிவான் மீகியன் றந்தணனும்
சுஞ்ஞானி யாயினன்வே மா.

(க-து) அஞ்ஞானமே சூத்திரத்தன்மை யென்றும் ஞானமே பிராஹ்மணத் தன்மை யென்றும் சுருதிகள் அறுதியிட்டுரைப்பதைப்பார். முற்காலத்தில் வேடனாகிய வான்மீகி யென்பவன் அஞ்ஞானத்தை யகற்றி மெய்ஞ்ஞான மெய்தி அந்தணனாகவில்லையா. ஆகவே, ஞானமில்லாதவனே சூத்திரன்; ஞானியே பிராஹ்மணன் என்றறிந்துகொள்.

(11) காக்க கணவன் மனைவியை யெக்காலும்
காக்க வகையிலான் சாதலே நன்மையாம்
காப்பிலா வில்வாழ்க்கை காணின் நகையாகும்
சீர்ப்படா தென்றுவே மா.

(க-து) கணவன் தன் மனைவியை யெப்போதும் அடக்கிக் காத்தல் வேண்டும். அவ்வாறு அடக்கியாளத் திறமை யில்லாதவன் பழிச்சொற்கள் செவிப்படு முன்னர் உயிர் துறத்தல் வேண்டும். அடக்கியாளப் படாதவள் செய்யும் குடித்தனம் நகைப்பிற் கிடமாவதோடு சீர் கெட்டழியும்.

(12) கோபத்தி னால்நரக கூபமே சித்திக்கும்
கோபத்தி னாலே குணங்களெல் லாமழியும்
கோபத்தி னால்வாழ்க்கை குன்றியே மாயுமே
பாபவி நாசவே மா.

(க-து) கோபமானது தன்னையுடையானை நரகக் குழியில் சேர்க்கும்; கோபத்தினால் ஒருவனது, நற்குணங்களெல்லாம் நசிக்கும்; கோபத்தினால் வாழ்க்கையும் தாழ்ச்சி யுற்றழியும்.

கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கையாம்
கோபமே யறிவினைக் குறைக்குங் குட்டநோய்
கோபமே தாயையும் கொல்லும் திண்படை
கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ,
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

என்றார் பிறரும்.

(13) எத்தனையோ தேசம்பார்த் தெப்பாடு பட்டாலும்
தத்தமதிர்ஷ் டந்தத்தம் பின்னால் தெரியுமே
பூமி புதிதன்றிப் போக்தா புதியனோ
நீமகிழ்ந் தோதுவே மா

(அ-ரை) போக்தா=அனுபவிப்போன்.

(க-து) சிலர், 'இவ்விடம் அனுகூல மானதாயில்லை; வேறிடத்திற்குப் போகவேண்டும்' என்று எத்தனையோ தேசங்களில் திரிந்து எவ்வளவோ கஷ்டப்படுவர். எத்தனை தேசங்கள் சுற்றினாலும் அவரவர் அதிருஷ்டமும் பின் தொடர்ந்து செல்லா தொழியாது. சுற்றித்திரிந்து பார்க்கும் இடங்கள் புதியனவாகுமே யன்றி அவற்றைப் பார்ப்போன் புதியனல்லவே. ஆகவே, அவ்வாறு திரிவதனால் புதிதாக ஒரு அதிருஷ்டம் அங்கு அகப்படப் போவதில்லை. ஆகவே, இவ்வாறு நினைப்ப தெல்லாம் மூடத்தனமே யாகும்.

---

ஞானிகள் முயலவேண்டுவது உலகத்தை வெறுக்கவன்று, அறியவே யாகும்.

(14) மதுச்சுவையி னுளீ மகிழ்வுடனே கிச்சாம்
மதியிலான் காமசுவை மாந்தவெண் ணிச்சாம்
தியாகியல் லானறம் செப்பினும் சாமே
வியாகுல முற்றுவே மா.

(அ-ரை) மது=தேன். மாந்த=அருந்த, தியாகி தருமவான். செப்பு=சொல்.

(க-து) ஈயானது தேனின் சுவையி லாசைகொண்டு சந்தோஷமாக உண்ணப்போய் அதில் விழுந்து சாகும். அறிவிலாதவன் மாதராசையால் மயக்குண்டு காமாந்தகாரமென்னும் கள்ளுண்டு சாவான். உலோபி தருமம் என்ற சொல் செவிப்பட்ட வளவில் வியாகுலமுற்று மரிப்பான்.

(15) கமல பவனுக்குங் கர்த்தாவா மென்பர்
அமல வரிகாக்கும் போக்குமா னென்பரால்
மூர்த்திபல வாயினும் மூலமொன் றேயடா
ஓர்தியிவ் வுண்மைமவே மா.

(அ-ரை) கமலபவன்=தாமரை மலரிற் றோன்றிய பிரமன். அமல=பரிசுத்த. ஓர்தி=ஆராய்ந்தறி.

(க-து) பிரமன் சிருஷ்டி கர்த்தா; அரி காத்தற் கடவுள்; சிவன் அழித்தற் கடவுள் எனக்கூறுவர். இவ்வாறு மூர்த்திகள் மூவராகக் கணப்படினும் அம்மூவரும் ஒருவரே. அம்மூவர்க்கும் மூலமாயிருப்பது ஒரு வஸ்துவே. ஆகவே, அம்மூவர்க்குள்ளும் பரஸ்பரம் பேதமில்லை.

ஆதிப் பிரானு மணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யயனும்
சோதிக்கின் மூன்றுந் தொடர்பினி லென்றெனர்
பேதித் துலகம் பிணங்குகின்றார்களே

என்னும் திருமந்திரார்த்தத்தையுங் காண்க

(16) வரும்போ தெதைக்கொண்டு வந்தான் மடிந்திவன்
போம்போ தெதைக்கொண்டு போவா னிடைநடுவில்
சேகரித்த பொன்னெங்கே செல்லு மிடமெங்கே
வாகுடனே கூறுவே மா.

(க-து) மனிதன் இவ்வுலகத்தில் பிறந்தபோது என்ன கொண்டு வந்தான்? ஒன்றுமில்லை. சாகும்போது தன்னுடன் எதைக்கொண்டு போவான்? ஒன்றுமில்லை. இடையில் சிலகாலம் இங்குத் தங்கி யிருக்கும்போது திரவியத்தைச் சேகரிக்கின்றான். அதனை இங்கேதானே விட்டு எங்கோ சென்று விடுகின்றான். அவன் சேகரித்த பொருளோ அன்னியர் வசமாகின்றது. அவனுக்கும் அச்செல்வத்திற்கும் யாதொரு சம்பந்தமு மில்லாதே போகின்றது. ஆகவே, இவ்வுண்மையை யுணர்ந்து உள்ளபொழுதே சேகரித்த பொருளைக் கொண்டு தான தருமங்களைச் செய்து புண்ணியந் தேடல்வேண்டும்.

பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவதில்லை இடைநடுவே
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்ததென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லுவேன் கச்சியேகம்பனே.

என்ற பட்டினத்தடிகள் பாடலின் கருத்தை இதனுடன் ஒப்பிடுக.

(17) ஆதியாம் காரண மற்பனெவ் வாறறிவான்
ஓதவரி யான்குற்றம் கூற வறிவான்
உடைக்கவறி குக்க லடுக்க வறியுமோ?
பீடுடைப் பொற்பவே மா.

(அ-ரை) குக்கல்=நாய். பீடு=பெருமை.

(க-து) பெரியோர்கள் தக்க காரணமில்லாமல் எக்காரியத்தையும் செய்ய மாட்டார்கள். அக்காரணங்களை மூடனறிவானோ? அறியான். அதனால் அவன் அவைகளைக் குற்றமெனச் சொல்லிக்கொண்டிருப்பான். அவனைக் கூறும்படி கேட்டால் அதனைக் கூறவுமறியான். தான் காரணங்கூற வறியாதவனாயினும் குற்றங் கூறுவதிற் குறைவிராது. நாய் சட்டிபானைகளை யுருட்டி உடைக்க அறியுமேயன்றி அவற்றை யடுக்க வறியுமோ? அறியாதன்றோ? அது போலவா மென்க.

(18) சனிபோதா தென்று தவிப்பார் சிலபேர்
சனிக்கெது போதாதோ தாமறிய கில்லார்
கருமபல மேகஷ்ட காரணம் தாமே
மருமமறி யார்கொல்வே மா.

(க-து) உலகில் சிலர் 'எனக்கு இப்பொழுது சனி போதாது; அதனால் தான் இவ்வளவு கஷ்டங்கள் நேரிடுகின்றன' எனக்கூறுவர். அந்தச்சனி இவர்களுக்கித்தனை கஷ்டத்தை யுண்டாக்கினு னென்பதிவர்க ளபிப்பிராயம். அப்படியே இருக்கட்டும், ஆனால் அந்தச்சனி வீடு வீடாகத் திரிந்துகொண்டு கஷ்டப்படுகின்றா னல்லவா? அக்கஷ்டம் அவனுக்கு யாரால் விளைந்தது? அதனை மாந்தரறியார். ஆகவே, அவரவர் கஷ்டத்திற்கு அவரவர் வினையே காரணமன்றிச் சனியன்று.

(19) இரும்பிறு மாயின் இருமும் முறையு
முருக்கிக் கருமானே யொன்றாக்க வல்லான்
மனமுடையு மாயின்மீண் டார்கூட்ட வல்லார்?
அனகவபி ராமவே மா.

(க-து) கடினமான இரும்பு இருதுண்டாக உடைக்கப்பட்டு விடுமாயின் கொல்லன் உலையிலிட்டு இருமுறை மும்முறை யேனும் காய்ச்சி முன்போல ஒன்றாகச் சேர்த்து விடுவான், ஆனால் பிறர்தம் கடுஞ் சொற்களால் மனம் உடைந்து போமாயின் அதனைப் பண்டுபோ லாக்கவல்லரார்? ஒருவருமிரார்.

"இரும்புடைந்தால் கூடும், மன முடைந்தால் கூடுமா?" என்றோர் பழமொழியும் உண்டு.

(20) சூத்திர ஞயினும் சுத்த மனத்தினனாய்
ஏத்துமறைக் கெட்டா விறையி னெறியறிந்
தப்பொருளே யாயி னவனேகா ணந்தணனும்
எப்பொழுது முண்மைவே மா.

(அ—ரை) மறை=வேதம், இறை=கடவுள்.

(க—து) சூத்திரனெனச் சொல்லப்படுவோ ஞயினும் பரிசுத்த அந்தக் கரண முடையவனாய்ச் சற்குருவையடுத்து உபதேசம்பெற்று வேதங்களுக்கு மெட்டாத பரப்பிரஹ்மத்தை யடையு நெறியறிந்து ஆத்ம சாக்ஷாத்கார மெய்தினவனாயின், அவனே பிராஹ்மணனன்றி வேறெவ்வகையினாலும் யாரும் எப்பொழுதும் பிராஹ்மணனாத லியலாது.

(21) சிலைகளைக் கண்டு சிவனெனப்பா விப்பார்
சிலைசிலையே யன்றிச் சிவனுமா காதரோ
தம்மிடத்தி லேசிவனைத் தாங்காணா ரென்மதியோ
இம்மானு டர்க்குவே மா.

(க—து) மாந்தர் கற்களைப் பார்த்துச் சிவனெனப் பாவிப்பர். கற்கள் கற்களேயன்றிச் சிவனன்றென வறியார். தம்முளேயுள்ள சிவனைக் காணாமல் இவ்வாறு மயங்கித் திரிவர். இஃதென்ன பேதைமை!

(22) சதிபுரியும் தீமை தனது பதிக்கலம்
பதிபுரியும் நன்மை சதிதனக்குப் பாதி
பதிபுரியும் தீமை சதிக்குச்சே ராதேன்
இதுவென்ன விந்தைவே மா.

(அ—ரை) சதி=மனைவி, பதி=கணவன்.

(க—து) மனைவி செய்யும் பாவ காரியங்களிற் பாதி கணவனைச் சேருமென்றும், கணவன் செய்யும் புண்ணியத்திற் பாதி மனையைச் சேருமென்றும் உலகருரைப்பர். ஆனால், கணவன் செய்யும் பாபம் மாத்திரம் ஏன் மனைவியைச் சேராது? இது எனக்கு மெத்த ஆச்சரியமா யிருக்கின்றது!

(23) கடனால் குடும்பத்தைக் கல்லலுற வைக்கும்
மடவோன் பெரும்பகையா மைந்தற் கெதிர்பேசும்
பீடிலாப் பெண்டிரும் பேசிலற் றேயாவள்
ஈடிலபி ராமவே மா.

(அ—ரை) கல்லல்=கலகம், மடவோன்=அறிவீனன், பீடு=பெருமை, அற்றே=அவ்வாறே.

(க—து.) கடன் அதிகமாக வாங்கிக் குடும்பத்தைக் கலக்கமுற வைக்கும் தந்தை பெருஞ்சத்துருவாவன். கணவன் வார்த்தைக் கிணங்காமல் எடுத் தெறிந்து பேசும் மனைவியும் கணவனுக்குச் சத்துருவாவாள்.

(24) கனகமான் காசினியிற் காணக் கிடையா
தெனவறியா னோராம னென்மதிவேந் தல்லனோ?
கெட்டகா லத்தில் கெடுபுத்தி தோன்றுமே,
இட்டமுட னுய்திவே மா.

(அ—ரை) கனகமான் = பொன்மான். மதி = அறிவு.

(க—து) மாயப்பொன்மானைக்கண்டு சீதாபிராட்டி பிடித்துத் தருமாறு வற்புறுத்தியபோது இளையபெருமாள் "அது பொய்ம்மான்—மாயமான். இத் தகைய பொன்மான் உலகத்திலிருத்தலில்லையயா" தெனக் கூறியும், ஸ்ரீராமச் சந்திரன் அவன் வார்த்தையை யேற்றுக் கொள்ளாமல், உண்மையான மானெனவே கருதிப் பிடிக்கச் சென்றார். பொன்மான உலகில் இல்லை யென்பதை அறியாரோ? அவ்வளவு அறிவில்லாதவரோ அவர்? அன்றே. சிறந்த விவேக முடைய வேந்தர் பெருமானல்லரோ? இருந்தும் உணராததற்குக் காரண மென்னவெனில், கெட்டகாலத்திற் கேற்றவாறு அவர் அறிவு மழுங்கிற்று. எத்தகைய விவேகிகளுக்கும் தீமை யனுபவிக்க வேண்டியகாலம் நேரிடு மாயின் கெடுபுத்தி தோன்றுவது சர்வ சாதாரணம்.

அறியாரு மல்லர் அறிவ தறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்.

* * * *

செய்த வினையான் வரும். (நாலடியார்)

(25) வித்தை யிருந்தும் விநய மிலதேல்வ்
வித்தையின் மேன்மை வெகுநகை பூண்டாலும்
மாங்கலிய மில்லாத மங்கையை மானுமே
தீங்கிலபி ராமவே மா.

(அ—ரை) விநயம் = நன்னடக்கை, அடக்கம்.

(க—து) ஒருவனுக்கு வித்தை யிருந்தும் விநயமில்லா விட்டால் பய னில்லை. அத்தகைய வித்தையானது சகல ஆபரணங்களை யணிந்திருந்தும் மாங்கலிய சூத்திரமில்லாத மங்கையின் வாழ்க்கையைப் போன்றதாகும்.

---

மனிதர் அவசியம் கவனிக்க வேண்டிய உண்மையான, நியாயமான, கௌரவமான விஷயம் தங்களைச் சுற்றியுள்ளவர், தங்களுக்குப் பின்வாழப் போவர் இருவருடைய நன்மையை நாடுவதே.

# குமணன் கொடைத் திறனும் பாவலர் பண்பும்.

(அகரம்-வீ. கிருஷ்ணசாமி.)

செந்தமிழ் மணம் சந்ததமும் வீசப்பெறும் நந்தமிழ் நாட்டை பண்புடன் புரந்த பண்டைத் தமிழ் மன்னர் பலரும், தம்மிடம் 'இல்லை' யென்று வந்தார்க்கு 'இல்லை' என்னாது, இனி, அவர்க்கு வறுமையே இல்லை என்று கொடுக்கும் வள்ளன்மை வாய்ந்தோராய் விளங்கினர். அத்தகையோர்களில் குமணன் என்னும் சிற்றரசனும் ஒருவனுவன். குமணன் என்பான் முதிரமலையடுத்த வளம்பெற்ற நாட்டின் அரசன். முதிர்ந்த கல்வியறிவுடையவன். இரவலர்க்கு இன்புடன் கொடுக்கும் புரவலன். பாவணர் மிடிக்குப் பகைவன். நாவலரும் பாவலரும் மகிழ்ந்து போற்றும் பேறு பெற்றவன். புலவர்தம் வருகையைக் காணின் புன்முறுவலுடன் அகமலர்ச்சி கொண்டு அவர்தம்மை எதிர்கொண்டழைத்து ஆதனத்திருத்தி உபசரித்து அருஞ்சுவை அமுது அருத்தி, பின்னர் அப்புலவருடன் தண்டமிழ் மொழியின் இனிய ஓசை, அமைதி, எழுத்து, சொல், பொருள் எனும் இலக்கண அழகு, சொன்னயம், பொருணயம் முதலிய பன்னயங்களைப்பற்றியும் நெடுநேரம் உரையாடி, புலவர்தம் மாட்சி உணர்ந்து, வியந்து, அகமகிழ்ந்து, புலவர் மிடியெவாம் அடியோடு தொலைய மணியும், பொன்னும், களிறும் வரையாதளிக்கும் வழக்கமுடையானு யிருந்தான். இவனது பெருங்குடைத்திறனைத் தமிழக முழுவதும் போற்றத் தலைப்பட்டது.

ஓர் தாய் வயிற்றில் பிறந்த இருவர் ஒற்றுமையில்லாது இருப்பது உலகில் காண்பதாகும். இவ்வள்ளல் தம் அருங்குணத்திற்கு நேர்மாற்றமாக இழி குணங்கொண்ட இளவல் ஒருவன் இருந்தான். குமணனது புகழைக்கண்டு, நெஞ்சம் பொறாது இளங் குமணன் நஞ்சனைய வஞ்சனைச் செயல்களால் குமணனைக் காட்டிற்கு ஓட்டினன். குமணனுே அநித்தியமாகிய செல்வத்தில் ஆசைநீங்கித் தம்பிக்கே அவையனைத்தும் உரிமையாக்கி, காடு சேர்ந்து கரந்துறைந்தான். நஞ்சினும் கொடிய நெஞ்சினனுகிய இளவல், அண்ணன் பொருளனைத்தும் தானே கவர்ந்து காட்டிற்கு ஓட்டியதோடமையாது தமையன் உயிரோடிருந்தால் என்னுவது, நாட்டைப்பெறும் முயற்சியில் நாடுவான் என்றெண்ணி, அவனை காட்டினின்றும் வீட்டிற்கே (விண்ணுலகு) அனுப்ப வேண்டுமென்னும் தீய எண்ணத்தினுல், "குமணன் தலையைத் துணித்துக் கொணர்வார்க்குக் கோடி செம்பொன்" என நாடுமுழுவதும் பறையறையச் செய்தனன். அவ்வாணையைக் கேட்ட சான்றோர் இளையவனின் கயமையை வெறுத்தனர்.

---

நம்மிடம் பகைப்பதற்குப் போதுமான சமய உணர்ச்சி உளது. ஆனுல் அன்பு செய்வதற்குப் போதுமான அளவு இல்லை.

புலவர்க்கேற்ற புரவலனான புனிதக்கோமான் குமணவள்ளல், "இனிது இனிது, ஏகாந்தம் இனிது' எனும் மூதாட்டியின் மொழிப்படி காடுறைதல் நாடுறைதலினும் இனிதாகக்கொண்டு இருந்து வருவானாயினான்.

இது இவ்வாறாக, குமணனைப் பிரிந்த குடிமக்கள் துக்கத்தில் ஆழ்ந்தனர். இளையவன் கொடுமை கண்டு திகைத்தனர். புலவர்களும் தமமை ஆதரிப்பாரில்லை என்பதைக் கண்டனர்.

"பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
தல்லலுழப் பதறிதிரேல்—தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி உறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலர்ந்து"

என்னும் நாலடியாரின் சீரடிகளின் உண்மைப்படி, இலக்கியக் கடல் கடந்தும் அலக்கணுறுத்திய வறுமைக்கடல் கடக்க வகை காணாது அல்லலுற்ற பெருந் தலைச் சாத்தனார் எனும் பெரும்புலவர் தமது மிடிதீரப் பரிசில் பெற்று வாலா மென்று கருதி குமணன்தம் நாட்டை நோக்கிச் சென்றார். ஆனால் ஆண்டு நடந்த வினைத்தும் செவியுறறுத் திடுக்குற்று வருந்தி, அருங்குணச் செம்மல் குமணன் இருந்த காட்டை எளிதில் அடைந்து கண்டனன். காணலும் களிப் புற்று "புலவர் குறை தீர்க்கும் புரவலனே! வாழிய! வாழிய!" என்று வாழ்த் தினார். வாழ்த்தொலிகேட்ட வள்ளல் புலவரைக் கண்ணுற்று "செந்தமிழ்ச் செல்வீர்! வருக! வருக! கானுறை வாழ்க்கைகொண்ட என்னிடம் நீர் இது பொழுதுவர, யான் முன் செய்த தவப்பயன்தான் என்னையோ!" எனப் புல வர்க்கு முகமனுரைத்து அமரச் செய்தான். வள்ளலை நோக்கிப் புலவர்" செந்தமிழ்ச்சுவை நன்குணரும் செம்மால்! சீரிய வள்ளலே! தீஞ்சுவைத் தேன், காட்டில் உயர்ந்த கொம்பிலிருப்பினும் அதைவிடுத்து, தம் அகத் தருகில் பழுத்திருக்கும் எட்டியை எட்டிப்பார்ப்பரோ?" என்றுகூறித் தமது வறுமை நிலையை விளக்கி வருந்திநின்றார்.

செவியுற்ற குமணன் மிக்க துன்புற்றுச் சிந்தித்தான். பாவம்! என் செய் வான்? பலபல யோசித்தும் ஒன்றும் கையிலில்லை என்பதை உணர்ந்தான். தன் இளவல், தன் தலைக்கு கோடி பொன் கொடுப்பதாய் பறையறைவித் திருந்தது நினைவிற்கு வந்தது. வரலும் "இத்தகைய நிலையிலும் இலை என்று கூறாத பெரும்பேறு பெறச்செய்த எம்பியினும் இனியோர் உண்டோ?"

"அந்தநாள் வந்திலீர் அருந்தமிழ்ப் புலவீர்
இந்தநாள் வந்துநீர் நொந்தனி ரடைந்தீர்
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
விலைதனைப் பெற்றும் வறுமைநோய் களைமின்"—

என்றுகூறி புலவரது கரத்தில் தன் உடைவாளைக் கொடுத்தனன். என் செய் வார் புலவர் இந்நிலையில்? துடித்தார்! வெருண்டார்.

வள்ளல் தலையினை வாளால்கொய்து என்று மழியாப் பழியினை ஏற்க ஒருப்படுவரோ புலவர் சிகாமணி? வாளை வாங்க மறுப்பின் தானே தலை துணித்துக் கொடுப்பினும் கொடுப்பான் என்று உடனே வாளைக் கையில் வாங்கினார். "தலைக்கொடையாளியே! ஓரிடத்திலும் நிலைத்திரா இச்செல்

வத்தின் பொருட்டோ யான் நின்தலை துணிப்பது? அதினும் அழியாப்பழி வேறுண்டோ? உன் தலைபெறுதல் எனக்கு இன்றியமையாததாயின், யான் வேண்டும்போது தெரிவிப்பன். அதுகாறும் அதைக் காத்தல் வேண்டும்'' என்றுகூறி அவனது அரும்பெருங் கொடைத்திறனைப் பலப்பட புகழ்ந்தார்.

''இந்த வாளுடன் இளங்குமணனிடம் சென்று வள்ளலின் கள்ளமில் பல நற்குணங்களை எடுத்துக்காட்டி இருவரையும் நட்பாக்குவித்து குமணனை மீண்டும் அரசு நிலையெய்தச் செய்வேன்'' என்று தம்முள் அறுதியிட்டு, குமணனை நோக்கி, ''அரசே! சின்னாளில் நின்னை வந்து காண்பேன்'' எனக்கூறி விடைபெற்றுச் சென்றார்.

இளங்குமணனோ செல்வக்களியாட்டயர்ந்து, இறுமாந்து அண்ணன் தலைகொணர்வார் ஒருவரையும் இன்னும் காணப்பெறாததால் கவற்சியுடன் கொலு மண்டபத்தில் வீற்றிருந்தான். அந்நாள் நம் புலவர் மண்டபவாயிலை அடைந்து தம் வருகையை அரசனுக்கு அறிவித்தார். ''வாளுடன் ஒருவர் வந்துளார்'' என்றலும் மிக்க மகிழ்ச்சியுடன் வரவிடுத்தான். புலவரும் அரசவை சென்று ஆங்கு ஆசனத்தமர்ந்து ''இளங்குமணன்'' முகத்தைப் பார்த்தார். தம் வாயினின்றும் வரும் வார்த்தையை வெகு ஆவலாக எதிர்பார்க்கின்றான் அரசன் என்பதை உணர்ந்த புலவர் புன் மதியாளனை நோக்கி, இவ்வுலகில் நிலைபெற விரும்பினோர் தம் கொடையால் புகழை நிறுத்திச் சென்றனர் ''அத்தகைய புகழ் உலகுள்ளளவும் நீங்காது. உன் அன்பிற்குரிய அண்ணனும் கொடையில் மிக்கோனாகிய குமணவள்ளலும் இது பொழுது காட்டினுறைகின்றமைக்கு வருந்தாதிருக்கும் உன் கன்னெஞ்சம் இருந்தவாறு என்னே! இப்பொழுது தன்னிடம் ஒன்றுமிலை என்று, எனக்குப் பரிசிலாக தன் தலையினை கொண்டுவந்து கோடி பொன் பெறுமாறு வாளை என்னிடம் கொடுத்துள்ளான். நீ உன் அண்ணனை இழப்பின் அத்தகைய ஒருவனை இனிப் பெறுதல் முடியாதென்பது திண்ணம். ''உடன் பிறப்பால் தோள்வலிபோம்''- என்பதும் நீ அறியாததோ? பகையரசரெலாம் பணிந்து நிற்க, நீ உன் அண்ணனுடன் ஒத்து வாழ்தலன்றோ விழுமியதாகும். அதுவே புகழும் ஆகும்'' என்று பலவிதமாய் சகோதர ஒற்றுமையை எடுத்துக்காட்டி வாளை நீட்டினார்.

இவ்வாறு ஒற்றுமையாகிய தெள்ளமுதத்தைத் தம் செஞ்சொற் குழுவாகிய சங்கால் எடுத்துப்புகட்டி இளவலின் வஞ்சம் நெஞ்சம் விட்டு அகலும்படி செய்தார். உடனே அவனிடம் சகோதரவாஞ்சை யெனும் வெள்ளம் ததும்பலாயிற்று. அவ்வளவில் தன் தமையனுக்குத் தானிழைத்த தீங்குகளையெல்லாம் நினைத்து இரங்கி, புலவரையே சரணாக அடைந்து தமையனை அழைத்து வந்து முன்போல் அரியணையில் அமரச் செய்யும்படி வேண்டி நின்றான்.

புலவரும் தாம்கொண்ட கருத்து கைகூடிமென மனமகிழ்ந்து அவ்வாறே செய்வதாக இளங்குமணனைத் தேற்றி அவனைத் தமையன் இருக்குமிடம், நகரமாந்தரும் அமைச்சரும் உடன்வர, அழைத்துச் சென்றார். இளவல் தன் ஆருயிர்த்தமையனைக் கண்டதும் விரைந்தோடி அவனது அடியில் தன் முடிபடிய நெடிது வீழ்ந்து ''அண்ணலே! அறியாது அடியேனிழைத்த தீங்குகளைப் பொறுத்து மன்னித்தல் வேண்டும். தாங்களிருந்த அரியாசனத்தில்

யானிருத்தல் அரிமாவிருந்த இடத்தில் நரிமா விருப்பதையன்றோ யொக்கும். இனித்தாழ்க்காது நாடு போந்து முடிசூடாவிடின் நின் அடியில் வீழ்ந்து உயிர் துறப்பன்'' என்று கதறி வேண்டி நின்றான்.

குமணன் புலவரையும் தம்பியையும் இனிது நோக்கி ''காடுறை வாழ்க்கையே சாலவும் நலம் பயப்பது எனக்கண்டேன். தம்பி! நீ நாடுபோந்து அரசுரிமை தாங்கி ஆள்வாயாக! இதுகாறும் நீ எனக்கு இன்னல் செய்ததாக என்மனம் எண்ணியதில்லையே. என்னை நாட்டிற்கு அழைப்பதே பெருந் துன்பம் விளைவிப்பதாகும்'' என்று விடையிறுத்தான்.

கேட்ட இளங்குமணனும் நகரமக்களும் புலவர் முகத்தை ஒரு முகமாய் நோக்கினர். நோக்கலும், புலவர் குமணனைப் பார்த்து ''—வ! தலைக் கொடையாளியே! நீ எனக்கு நின் தலையை அளித்ததை மறந்தனையோ; அத்தலையில் உனக்கு உரிமையாதுளது? என் தலையில் முடிபுனைய நான் விரும்பின் அதற்குத் தடை யாதுவது' என உரைக்கவே, குமணன் மறுத்தற்கின்றி அவர் வேண்டுகோட் கிணங்கினான். புலவர் புரவலரிருவரையும் நாட்டிற்குக் கொண்டுபோய் குமணவள்ளலை அரியணையேற்றி மணி முடி கவித்து அரசியல் தாங்கவும், இளவல் தமையனுடன் இருந்து மூததோன் ஏவல் வண்ணம் நடந்து வரவும் செய்தார். நகர மாந்தரும் உவகைக்கடலுள் மூழ்கினர்.

பின்னர் குமணன் புலவரது ஒப்பிலா அறிவாற்றலுக்கும் அருட் பெருங் குணத்திறனுக்கும் வியந்து, மகிழ்ச்சியுடன் புலவர் வறுமை தலைகாட்டா தொழியும்படி பொன்னும் மணியும் விளை புலங்களும் அளித்தான். புலவரும் விடை பெற்று மகிழ்வு பூத்து வறுமைப்பிணி நீங்கி இனிது வாழ்ந்திருந்தார். தமிழின் இனிமையில் ஆர்வமுற்று மகிழ்ந்து வாழ்ந்த வள்ளல், தான் காட்டிலிருக்கையிலும் தன்னிடம் ஒன்றுமில்லை என்பதைக்கண்டும், புலவர் வருகையினால் பெரிதும் உவகை கொண்டான். புலவர் வறுமையைப் போக்க வழிகாணாவிடத்து, புலவரின் வறுமைகண்டு வருந்தி தம் இயற்கை வண்மையினால் தம் தலையையே துணித்து சென்று கோடிபொன் பெற வாளைக் கொடுத்தான். இவனது கொடைத்திறம் என்னே! கடையெழு வள்ளல்களில் மயிலுக்குப் போர்வை யீந்த பேகனும், காட்டின் கொழு கொம்பின்றி வாடிய முல்லைக் கொடி படர்வதற்கு தன் பொற்றேரை அதன் அருகே நிறுத்தி தான் இணையடிசிவக்க நடந்த வள்ளலும், 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரில்லை' எனச் சிறப்பிக்கப்பட்டவனும், தன் வரையாவீகையால் உலகுள்ளளவும் ஓங்கு புகழ் பெற்றவனும் தமிழ் வள்ளல்களில் முதன்மையானவனுமான பாரி என்பானும் செய்த கொடை குமணன் கொடைத்திறத்திற்கு ஒப்புமோ. இவன் கொடைத்திறத்தின் முன் அவர்கள் தம் கொடை இரவி முன் மின்மினியே யாகுமன்றோ? தன்னை வந்தடைந்தோர் இன்னல் போக்கத் தன்னையே நல்கிடத் துணிந்த நம் வள்ளல் அருட்டிறத்தை நோக்கின் எவரை ஒப்பிடுவது!

தம் தீராவறுமைப் பிணி போக்கதக்க நன்மருந்து பெறவந்த புலவர்தம் அருங்குணங்களை உன்னுந்தோறும் உவகை பொங்கும். வறுமையால் வாடிப் பரிசில் பெறவந்த புலவர், காவலன் கரந்துறைவதைக் கண்டார். வறுமை நிலைக்கு ஆற்றாது மன்னன் வாள் கொடுத்தான். புலவரோ புன்மதியாளர்

அல்லர். வள்ளல் தலைதுணித்துப் பசும்பொன் பெறுதல் எத்துணை வசைக்கு ஆளாக்கும் என்பதை உன்னி, தாம் தாழ்ப்பின், தானே துணித்து கொடுக்கும் வள்ளன்மை வாய்ந்தோன் குமணன் என்பதை நன் குணர்ந்த புலவர் தாமே அதை வாங்கிச் செய்த சூழ்ச்சி போற்றற்குரியதாம். காட்டினின்றும் இளவலிடம் சென்று அவனது தீய குணங்களைப்போக்கி தூயனாக்கிய அவரது அறிவின் மாட்சியும், செஞ்சொல் வன்மையும் கண்டு களிக்கத் தக்கது. மற்றும் குமணன் செங்கோல் கொள்ள மறுத்தபோது அவன் மாற்றம் உரையாவண்ணம் முடிபுனைந்து தாம் கொண்ட காரியம் முற்றுவித்த புலவரின் ஆற்றலும் அளந்துரைக்கற்பால தன்று. இத்தகைய அன்பு, அருள், வாய்மை, தூய்மை முதலிய அருங்குணங்களுக்கு இருப்பிடமாயிருந்தனர் பண்டைப் புலவர் பெரு மக்கள் என்பது கண்டு ஆனந்திக்கத்தக்கது.

## கலியாணக் களி.



பெண்:—அம்மா! இது என்ன கிழட்டுப் பூதம்!

தாய்:—அடி கட்டையிலே போவே! அப்படிச் சொல்லாதடி முண்டே! அவர்தான் உன் ஆம்படையான்!

பெண்:—இவனா? அம்மா! அம்மா! எனக்கு இவன் வேண்டாம்! நீ சொன்னதுபோலக் கட்டையிலேயே போகிறேன்! இல்லாமற் போனால் முண்டைச்சியாகப் போகிறேன். தோலோ தோலோ இவன வேண்டவே வேண்டாம்! பார்க்கையிலேயே பயமாக இருக்கிறது.

தாய்:—இல்லடி இவர் நல்ல சாஸ்திரி. வயது என்ன எழுபதுதானே ஆகிறது. லட்ச ரூபா சொத்து இருக்கிறது!




# காந்தியடிகளின் சிறைவாசம்



மகாத்மா காந்திஜியும், காங்கிரஸ் தலைவரான சர்தார் வல்லபாய் படேலும் இம்மாதம் 4-ந்தேதி விடியற்காலை 3-மணிக்கு பம்பாயில் 1827-ஆம் வருஷத்திய 25-வது ரெகுலேஷன் சட்டப்படி கைது செய்யப்பட்டு எரவாடா சிறையில் பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கின்றனர். காந்திஜி மணிபவனிலிருந்த எல்லாரிடமும் விடைபெற்றுக்கொண்டு சென்ற காட்சி மனதை உருக்கக்கூடியதாக இருந்தது. காங்கிரஸ் தலைவர் சர்தார் படேல் நாட்டுக்குச் செய்துகொண்ட வேண்டுகோள் பின்வருமாறு:—"சர்க்கார் நிர்வாகிகள் தேச ஜனங்கள்மீது போராட்டத்தை ஆரம்பித்து விட்டார்கள். இம்முறை முடிவான போராட்டம் நடத்தவேண்டியிருக்கும். நாம் இருப்பதா இறப்பதா என்பதே முடிவாகவேண்டும். நாம் வாழ்வதற்காக எந்தத் தியாகத்தையும் செய்யவேண்டும். அஹிம்சையைக் கடைப்பிடித்து ஜனங்கள் தியாகம் செய்தால் வெற்றி நம்முடையதே."

வைசிராய் கல்கத்தாவிலிருந்து இம்மாதம் 2-ந் தேதியன்று டெல்லிக்கு வந்ததும் தமது நிர்வாக சபையைக் கூட்டி மகாத்மாவின் அறிவுறுத்தலைப்பற்றி ஆலோசித்தார். ஆனால் அவர் பின்னர் மகாத்மாவுக்கு அனுப்பிய பதிலில், காங்கிரஸ் காரியக் கமிட்டியார் அவசரப்பட்டுத் தீர்மானத்தை நிறைவேற்றியிருப்பதாகவும், சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப் போவதாகப் பயமுறுத்தி வைசிராயின் பேட்டியைக் காணலாமென மகாத்மா நினைத்தது தவறு என்றும், ஏதேனும் அவசரப்பட்டுப் போராட்டத்தில் இறங்கி விட்டால் அதனால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களுக்கு மகாத்மாவும் காரியக் கமிட்டியுமே பொறுப்பாளிகளாவரென்றும் அறிவிக்கப்பட்டது. ஆகவே மகாத்மா இனி சமரச முயற்சி செய்வதில் பயனில்லை என முடிவுசெய்து தேசமக்களுக்கும் மற்றவர்களுக்கும் தமது செய்தியை அறிவித்து விட்டார். வைசிராய்க்கும் பின்வரும் பதிலை அனுப்பினார்:—தங்களுடைய தந்திக்காகத் தங்களுக்கு வந்தனம். ராஜப்பிரதிநிதியாகிய தங்களுடையவும் தங்களுடைய கவர்ன்மெண்டாருடையவும் முடிவுக்காக நான் மிக்க வருத்தம் தெரிவிக்காமலிருக்க முடியவில்லை. அபிப்பிராயத்தை உள்ளது உள்ளவாறாகத் தெரிவிப்பதைப் பயமுறுத்தலென வருணிப்பது நிச்சயம் தவறாகும். சட்டமறுப்பு நடந்துகொண்டிருக்கையில் டில்லி ராஜிப் பேச்சு துவக்கப்பட்டு நடத்தி வரப்பட்டதென்றும், ஒப்பந்தம் ஏற்பட்டபொழுது சாத்வீக எதிர்ப்பு கைவிடப்படவில்லை என்றும், ஆனால் அது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டதென்றும் தங்கள் கவர்ன்மெண்டிற்கு நான் ஞாபகமூட்டுகிறேன். இந்நிலைமை நான் லண்டனுக்குப் புறப்பட்டுச்

செல்லுமுன்பு மீண்டும் வற்புறுத்தப்பட்டது. தாங்களும் தங்களுடைய கவர்ன்மெண்டாரும் இதை ஒத்துக்கொண்டீர்கள். சில நிலைமைகளில் காங்கிரஸ்மீண்டும் சட்டமறுப்பைத் திரும்ப ஆரம்பிக்கக் கூடுமென்றும் நான் தெளிவாகத் தெரிவித்தபோதிலும் கவர்ன்மெண்டார் ராஜிப் பேச்சை முறித்து விடவில்லை. சட்டமறுப்புச் செய்தால் சட்டத்தை மீறுவதற்கான தண்டனை விதிக்கப்படுமென்று அதனுடன் பொருள் தொக்கி நிற்பதாகக் கவர்ன்மெண்டார் தெளிவாகக் கூறினர். இந்த பதிலினால் சட்டமறுப்புக் காரர்கள் எதைக் கோருகின்றார்களென்பது நிரூபணமாகிறது ஆனால் அதனால் எனது வாதம் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை. கவர்ன்மெண்டார் அந்த மனோபாவத்தை வெறுத்திருந்தால் அவர்கள் என்னை லண்டனுக்கு அனுப்பாமலே இருந்திருக்கலாம். இதற்குப் பதிலாக நான் புறப்பட்ட பொழுது ராஜப்பிரதிநிதி என்னை ஆசீர்வதித்து அனுப்பினர். எனது யோசனைகளைப் பொறுத்தே கவர்ன்மெண்டின் எந்த முறையுமிருக்க வேண்டுமென்று நான் எப்பொழுதும் கோரி வந்திருப்பதாகச் சொல்லுவது நியாயமாகுமா அல்லது சரியாகுமா? ஆனால் பொதுஜனப் பிரியத்திற்குப் பாத்திரமானதாயும் சட்ட ரீதியான முறையில் ஆளுகின்றதாயுமுள்ள எந்த கவர்ன்மெண்டும் எப்பொழுதும் பொது ஸ்தாபனங்களும் அவற்றின் பிரதிநிதிகளும் சொல்லும் யோசனைகளை வரவேற்று அவற்றை அனுதாபத்துடன் கவனிக்கும் என்றும் அவர்களுக்குப் பொது ஜனங்களால் கண்டிக்கப்படும் தனது செயல்களைப் பற்றியும் அல்லது அவசரச் சட்டங்களைப்பற்றியும் கிடைக்கக்கூடிய தகவல்களை எல்லாம் கொடுக்குமென்றும் நான் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

எனது செய்திக்குக் கடைசிப்பாராவில் சொல்லப்பட்டிருப்பதைத் தவிர வேறு எவ்வித அர்த்தமும் இருக்க முடியாதென தெரிவிக்கின்றேன். எவரது நிலைமை நியாயமானதென்பதைக் காலமே காட்டக்கூடும். இதற்கிடையில் போராட்டத்தைத் துவேஷ உணர்ச்சியில்லாமலும் முற்றிலும் அஹிம்சா தர்மத்திற்கிணங்கவும் நடத்தக் காங்கிரஸ் சகல முயற்சியும் செய்யுமென்று கவர்ன்மெண்டிற்கு நான் உறுதிமொழியளிக்க விரும்புகின்றேன். காங்கிரஸும் அதன் பணிவான பிரதிநிதியும் தங்களது செயல்களின் பலாபலன்களுக்கெல்லாம் பொறுப்பானவர்கள் என்பதை எனக்கு எடுத்து ஞாபக மூட்ட வேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்கவில்லை.

வைசிராய் மகாத்மாவுக்கு பேட்டி யளிக்கமுடியாதென அறிவித்து விட்டபின்னர் இந்திய க்ஷேமாபிவிருத்தி சங்கத் தலைவர்களும், மிதவாதத் தலைவர்களும், ஸ்ரீ. பெந்தால் முதலிய ஐரோப்பியர்களும் மகாத்மாவைக்கண்டு நீண்டநேரம் பேசிய பின்னர் வைசிராய்க்கும் தந்தி கொடுத்து மகாத்மாவுக்குப் பேட்டியளிக்க மறுத்தது தவறு என்றும், தங்கள் பிரதிநிதிகளை யாவது சந்திக்க வேண்டுமென்றும் அறிவித்தனர். மகாத்மா, தாம் கைது செய்யப்படலாமென்று அறிந்துகொண்டு பார்டோலி விவசாயிகளுக்கும், தேசமக்களுக்கும் ஒரு செய்தியை அனுப்பிவிட்டார். அதில் நாட்டில் எல்லா வகுப்பினரும் எல்லாக் கஷ்டங்களையும் அனுபவிக்க வேண்டுமென்றும், ஆனால் நிர்வாகிகளிடம் கோபிக்காமல் அம்முறையின் மீதே கோபங்கொண்டு அஹிம்சையினின்றும் சிறிதும பிறழாமல் போராட வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டிருக்கிறார். அமெரிக்கர்களுக்கு ஒரு செய்தி யனுப்பி, அவர்கள் இந்திய இயக்கத்தின் போக்கைக் கவனித்து ஒடுக்கப்பட்ட மனிதவர்க்கம் உயர்வடையப் பெரிய

தொரு தேசம் உதவி செய்யத் தன் செல்வாக்கை உபயோகிக்க வேண்டுமென்றும், இப்போராட்டம் சர்வதேச மதிப்புடையதென்றும் அறிவித்திருக்கிறார். லார்டு இர்வினுக்கு அனுப்பிய தந்தியில், தாம் எவ்வளவு முயன்றும் சமரசம் பலிக்கவில்லையென்றும், டெல்லியில் இர்வினுடன் கூடிப் பேசியபோது எந்த உணர்ச்சி தமக்கு இருந்ததோ அந்த உணர்ச்சியுடனேயே இன்னமும் இருந்து வருவதாகவும் அறிவித்துள்ளார்.

## சுபாஷ்பாபு கைதியானார்

இம்மாதம் 3-ந் தேதியே சுபாஷ் சந்திரபோஸ் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குப் புறப்பட்டபோது கல்யாண் என்னும் ஸ்டேஷனில் கைது செய்யப்பட்டு சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்.

பண்டித ஜவஹரிலால் வழக்கு 4 ந்தேதி விசாரணைக்கு வந்ததில் 2-வருஷ தண்டனையும் 500-ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது.

காங்கிரஸ் காரியக் கமிட்டியார் டிசம்பர் 30, 31 ஜனவரி முதல் தேதிகளில் கூடி யாலோசித்து சர்க்கார் இந்தியாவில் அனுஷ்டித்துவரும் முறைகளைப் பார்த்தால் அந்தச் சர்க்காரின் கொள்கை அடியோடு மாறினுலொழிய காங்கிரஸ் சர்க்காருடன் ஒத்துழைப்பது சாத்தியமில்லை யென்றும், சர்க்கார் எந்தக் காங்கிரஸின் ஒத்துழைப்பை விரும்புகிறார்களோ அக் காங்கிரசினிடத்திலேயே அவர்களுக்கு நம்பிக்கையில்லை யென்று தெரிகின்றதென்றும், வங்காளத்தில் சிலர் செய்யும் பலாத்காரச் செயல்களைப் பலமாகக் கண்டிப்பதாகவும், ஆயினும் சர்க்காரும் சட்டத்தின் மூலம் அனுஷ்டிக்கும் பலாத்காரச் செயலை ஆதரிக்க முடியாதென்றும், பிரதம மந்திரியின் அறிக்கை அதிருப்திகரமாக இருப்பதாகவும், எல்லைப்புறத்திலும் ஐக்கிய மாகாணத்திலும் அனுஷ்டிக்கும் அடக்குமுறையைக் கண்டிப்பதாகவும், வைசிராய்க்கு மகாத்மா அனுப்பியுள்ள தந்திக்குத் திருப்தியான பதில் வராவிட்டால் காந்தி–இர்வின் ஒப்பந்தத்தைச் சர்க்கார் முறித்துவிட்டதாகக் கொண்டு கீழ்க்கண்ட நிபந்தனைகளின்படி சட்டமறுப்பை ஆரம்பிக்கும்படி தேச மகா ஜனங்களைக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானித்தனர்.

இந்தப் போராட்டத்தின் அஹிம்ஸா தன்மையைப் பூரணமாகப் பொது ஜனங்கள் அறிந்துகொண்டு உயிரையும் உடமையையும் இழக்கவும், மற்றெல்லா கஷ்டங்களையும் சகிக்கவும் தயாராக வில்லாவிட்டால் எந்த கிராமமும், எந்த தாசிலும், எந்த ஜில்லாவும், எந்த மாகாணமும் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கவேண்டியதில்லை. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினலும் அஹிம்ஸையை அனுஷ்டிக்கவேண்டும். எவ்வளவு ஆத்திர மூட்டப்பட்டாலும் இந்த விரதத்திலிருந்து பிறழக்கூடாது. எதிர்ப்பவரிடம் பழிக்குப்பழி வாங்கவோ அல்லது அவர்களுக்குத் துன்பம் விளைக்கவோ இந்த இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதாக நினைக்கக்கூடாது. இது தன்னலத் தியாகத்துக்காகவும் ஆத்ம பரிசுத்தத்துக்காகவும் ஏற்பட்டதாகும்.

கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களையும், போலீஸாரையும் அல்லது தேசீயவாதிகளல்லாதவரையும் துன்பப்படுத்தும் நோக்கத்துடன் சமூக பஹிஷ்காரத்தை அநுஷ்டிக்கக்கூடாது. அவ்விதம் செய்வது அஹிம்ஸா விரதக் கொள்கைக்கே விரோதமானதாகும். பலாத்காரமற்ற போராட்டத்தில் பண சம்பந்த

மான உதவி அந்நியமானது என்பது மனத்திலிருக்கவேண்டும். ஆகவே கூலிக்கு வேலைசெய்யும் தொண்டர்களை அமர்த்தக்கூடாது. ஆனால் இயக்கத்தில் சிறைப்பட்டோ கொல்லப்பட்டோ போனவர்களின் குடும்பம் திக்கற்ற நிலையில் இருந்தால் அவர்களைத் தாங்க எங்கெங்கு சாத்தியப்படுமோ அங்கெல்லாம் உதவி செய்யலாம். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பிரிட்டிஷ் ஜவுளியையும் மற்றெல்லா அந்நியநாட்டு ஜவுளிகளையும் பஹிஷ்கரித்தே ஆகவேண்டும். சுதேசி ஆலைகளில் செய்யப்பட்ட ஆடைகளையும் விலக்கிக் காங்கிரஸ்காரர்கள் கைராட்டினத்தில் நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கைத்தறியில் நெய்யப்பட்ட ஆடைகளையே உபயோகிக்க வேண்டும். சாராயக்கடை மறியலையும் விதேச ஜவுளிக்கடை மறியலையும் மும்முரமாக நடத்திவர வேண்டும். இவ்வேலையில் பலாத்காரம் சிறிதும் ஏற்படாமலிருக்க இதை விசேஷமாக ஸ்திரீகளே செய்யவேண்டும்.

லைசென்ஸில்லாமல் உப்புச்செய்யும் வேலை மீண்டும் துவக்கப்படவேண்டும். ஊர்வலங்களையும் மற்ற கூட்டங்களையும் நடத்தினால் அவை கலைக்கப்படுவதற்கு தடியடியும் துப்பாக்கிப் பிரயோகமும் நடந்தால் அதை இருந்த விடத்திலிருந்தே தாங்குவதற்கான ஆற்றல் படைத்தவர்களே அவற்றில் கலந்துகொள்ள வேண்டும். பலாத்காரமற்ற போராட்டத்திலும் அடக்கியாளுவோரால் செய்யப்படும் சரக்குகளைப் பஹிஷ்கரிப்பது நியாயமாகும். ஏனெனில் கஷ்டப்படுவோர் அடக்கி யாளுவோர்களிடம் வியாபார சம்பந்தம் முதலியன வைத்துக்கொள்வது முடியாத காரியம். ஆகவே பிரிட்டிஷ் சரக்குகளையும் கம்பெனிகளையும் மும்முரமாகப் பஹிஷ்கரிக்க வேண்டும். ஒழுக்கமற்ற சட்டங்களையும் பொது ஜனங்களுக்குப் பாதகமான சட்டங்களையும் எங்கு வசதி யிருக்கிறதோ எங்கெங்கு உசிதமெனத் தோன்றுகிறதோ அங்கெல்லாம் மீறி நடக்கலாம். அவசரச் சட்டப்படி பிறப்பிக்கப்பட்ட முக்கிய உத்தரவுகளையும் மீறி நடக்கலாம்.

## காங்கிரஸ் ஏற்பாடுகள்

காங்கிரஸ் கார்யக்கமிட்டிக் கூட்டம் இம்மாதம் முதல் தேதி காலை கூடியது. தலைவர் கைதுசெய்யப்பட்டால் அவருக்குப் பின்னால் ஒருவரை நியமிக்க அவருக்கு அதிகாரம் கொடுப்பதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பிறகு தேசத்தினர் சிக்கனத்தைக் கருதி கவர்ன்மெண்டு மூலம் கிடைக்கும் வசதிகளான தந்தி, கோர்ட்டு முதலியவைகளையும் பஹிஷ்கரிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இத்தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்ட பின் கூட்டம் மாலை 3 மணி வரை ஒத்தி வைக்கப்பட்டது. அப்போது கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## உலகத்தாருக்கு விண்ணப்பம்.

பலாத்காரமற்றதும் நியாயமானதுமான இயக்கம் வெற்றிபெற வேண்டுமானால் பொதுஜன அபிப்பிராயம் அதற்கு ஆதரவாக இருக்கவேண்டும். உலகத்திலுள்ள பொதுஜனங்கள் கொஞ்சங் கொஞ்சமாக இந்தியா நடத்திவரும் தேசீய விடுதலைப் போராட்ட விஷயத்தில் அனுதாபம் அதிகமாகக் காட்டி வருவதற்கு கார்யக்கமிட்டி நன்றி செலுத்துகிறது. மீண்டும் இந்தியாவில் புதிதாகப் போராட்டத்தை நடத்தவேண்டிய அவசியமேற்பட்டு விட்டதால் உலகத்

தில் சுதந்தரம் வாய்ந்திருப்பவர்களும் அந்தந்த கவர்ன்மெண்டாரும் இந்த இயக்கம் அபிவிருத்தி யடைந்துவருவதைக் கவனித்து வந்து காங்கிரஸ் தேசீய லக்ஷியத்தை யடைய அனுஷ்டிக்கும் மார்க்கமுறை நியாயமானதாக விருந்தால் இதுவரை அளித்து வந்த ஆதரவை விட இன்னும் அதிகமாக இந்த இயக்கத்துக்கு ஆதரவு அளிக்கவேண்டுமென காரியக்கமிட்டி கேட்டுக் கொள்கிறது. காங்கிரஸ் பலாத்காரமற்ற முறையை அநுஷ்டித்து வருவது ஒரு முக்கிய விசேஷமென்றும் இது வெற்றிபெற்றால் யுத்த தளவாடங்களால் கஷ்டப்பட்டு வருந்தும் மனித கோடிகளின் அபிவிருத்திக்குப் பெரிதும் உதவியதாக விருக்குமென்றும் காரியக்கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

## விதேசி ஜவுளி வியாபாரிகளுக்கு வேண்டுகோள்

இனி விதேச ஜவுளி வியாபாரிகள் விதேச ஜவுளி வியாபாரம் செய்வதை விட்டுவிட வேண்டுமென்றும் விதேச ஜவுளி வியாபாரம் செய்வது நாட்டின் நன்மைக்குப் பாதகமாக விருப்பதாகவும், அவர்கள் தேசத்தாருடன் மனப்பூர்வமாக ஒத்துழைத்தால் ஏழைகளின் கஷ்டம் குறையுமென்றும் விதேச ஜவுளி வியாபாரம் அந்நிய ஆட்சியைப் பலப்படுத்தி விவசாயிகளை ஏழைகளாக்குவதால் விதேச ஜவுளி வியாபாரத்தை நிறுத்துவதால் விசேஷ பலனுண்டென்றும் காரியக் கமிட்டி தெரிவித்துக் கொள்ளுகிறது.

சுதேசி மில்களின் சொந்தக்காரர்களும், ஏஜெண்டுகளும், பங்குக்காரர்களும், டிரஸ்டிகளும் இந்த சமயத்தில் தங்கள் லாபத்தைப் பெருக்கிக் கொள்ளவோ கதர் இயக்கத்தை ஒழிக்கவோ பார்க்காமல் இருக்க வேண்டுமென்றும், சுதேசி மில் துணிகளையும் காங்கிரஸ் துணியென விற்கக் கூடாதென்றும் தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. ஜமீன்தார்கள் இந்த இயக்கம் தங்களுக்கு விரோதமாக நடத்தப்படுவதாக நினைக்காமல் அவர்களும் செல்வான்களும் காங்கிரஸுக்கு உதவ வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. சுங்க வரி விதிக்கப்படும் பொருள்களை அதிகமாக வாங்கி உபயோகிக்காமலிருக்கும்படி பொது ஜனங்களை வேண்டிக் கொள்ளவும் தீர்மானிக்கப்பட்டது. ரயில்வே, தபால், தந்தி முதலிய சர்விஸுகளின் உதவியைப் பெறுவதையும் பொதுஜனங்கள் கொஞ்சங் கொஞ்சமாக நிறுத்தி வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் யோசனை கூறப்பட்டது. இவ்விதம் செய்வதால் சுதேசியம் வளருவதோடு இந்தக் கஷ்ட காலத்தில் செலவும் குறையுமென எடுத்துக் காட்டப்பட்டது. இந்தியாக் கவர்ன்மெண்டார் அவசரச் சட்டங்களைக்கொண்டு இந்தியாவை ஆளுவதை முக்கியமாக உலகத்திலுள்ள மற்ற கவர்ன்மெண்டுகள் கவனித்து நியாயத்தின் பேரால் இந்திய விஷயத்தில் தலையிட வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## நான்கு அவசரச் சட்டங்கள்

இம்மாதம் 4-ந் தேதியன்று ராஜப்பிரதிநிதியும் கவர்னர் ஜெனரலுமான லார்டு வில்லிங்டன் 4-அவசரச் சட்டங்களைப் பிறப்பித்திருக்கிறார்.

சட்டமறுப்பு இயக்கத்தைச் சமாளிப்பதற்காக இந்த அவசரச் சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

### அவசர அதிகார அவசரச் சட்டம்

அவசர அதிகார அவசரச் சட்டமானது கவர்ன்மெண்டிற்கும் அதன் உத்தியோகஸ்தர்களுக்கும் சட்டத்தையும் ஒழுங்கையும் பராமரிப்பதற்காக விசேஷ அதிகாரங்களை அளிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் அமுலில் இருக்கும் அவசரச் சட்டத்தை அனுசரித்து இது செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த அவசரச்சட்டத்தில் கண்டதைவிட இந்த அவசரச்சட்டத்தின் ஹேது அதிகரிக்கப்பட்டிருக்கிறது. இப்புதிய அவசரச் சட்டத்தில் பொதுஜன அமைதிக்கும் பத்திரத்திற்கும் பாதகமான எல்லாச் செயல்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இது பழைய அவசர அச்சுச்சட்டத்தை இந்தியா முழுவதும் திரும்ப அமுலுக்குக் கொண்டு வருகிறது. இந்த அவசரச் சட்டம் உடனே வங்காளத்திலும் பம்பாயிலும் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டிருப்பதாக அறிக்கை மூலம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. சந்தேகிக்கப்பட்ட நபர்களைக் கட்டுப்பாடு செய்ய அவசரச் சட்டப்படி அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரம் பொதுஜன அமைதிக்கோ அல்லது பத்திரத்திற்கோ பாதகமாக நடப்பவர்களை மாத்திரமின்றி பொதுஜன பத்திரத்திற்கு அல்லது சமாதானத்திற்குப் பாதகமாக இருக்கக்கூடிய இயக்க முன்னேற்றத்திற்கான காரியங்களைச் செய்பவர்கள் விஷயத்திலும் செல்லக்கூடியதாக இருக்கிறது.

### சட்டவிரோதமான தூண்டுதலைத் தடுக்கும் அவசரச் சட்டம்

சட்டவிரோதமான தூண்டுதலைத் தடுப்பதற்காக இன்று பிறப்பிக்கப்பட்ட அவசரச்சட்டம் ஐக்கிய மாகாணத்திற்காகவும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திற்காகவுமுள்ள அவசரச் சட்டத்தைப் போன்றே இருக்கின்றன. இது சென்னை, பம்பாய், பஞ்சாப், பீஹார், ஒரிஸா, மத்திய மாகாணம் ஆகிய மாகாணங்களில் உடனே அமுலுக்குக்கொண்டு வரப்படும்.

### சட்டவரம்பு மீறிய ஸ்தாபனங்கள்

சட்டவரம்பு மீறிய ஸ்தாபனங்களைப் பற்றிய அவசரச் சட்டம், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலிருப்பதைப் போன்றிருக்கிறது. இது உடனே சென்னை, பம்பாய், ஐக்கிய மாகாணம், பீஹார், ஒரிஸா ஆகிய மாகாணங்களில் அமுலுக்கு வரும். இந்திய கவர்ன்மெண்டாருக்கு எந்த சங்கத்தையும் இதன்படி சட்டவரம்பு மீறியதென பஹிரங்கப்படுத்தவும் அதை பிரிட்டிஷ் இந்தியா முழுவதும் அமுல் நடத்தவும் அதிகாரம் உண்டு. சென்ற தடவை ஒவ்வொரு மாகாணக் கவர்ன்மெண்டும் தனித்தனி காங்கிரஸ் கார்யக் கமிட்டியைச் சட்டவரம்பு மீறியதெனப் பஹிரங்கப்படுத்த வேண்டியிருந்த கஷ்டத்தைப் போக்குவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

### பகிஷ்காரத் தடை அவசரச்சட்டம்

தாக்குவதையும் பகிஷ்காரத்தையும் தடுப்பதற்கான அவசரச் சட்டம் பிரிட்டிஷ் இந்தியாவெங்கும் செல்லக்கூடியதாக இருக்கிறது. ஆனால் இதனை அமுலுக்குக் கொண்டு வருமுன்பு சம்பந்தப்பட்ட மாகாண கவர்ன மெண்டார் இது அமுலுக்குக் கொண்டுவரப்படுவதாக அறிவிக்க வேண்டும். இதுபெரிதும் பழைய அவசரச் சட்டம்போலிருக்கிறது. ஆனால் இதில் 'தாக்குதல்'

என்ற பதத்தின் பொருளுள் அமைதியான மறியல் என்ற அர்த்தமும் அடங்கி யிருப்பதாக இதன் வியாக்யானம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இதன்படி இனி அமைதியான மறியலும் குற்றமாகும்.

## சென்னையில் தடை உத்தரவு

இம்மாதம் 4-ந் தேதிமுதல் ஒருமாதகாலம்வரையில் சென்னை நகரத்தின் எந்தப் பாகத்திலும் காங்கிரஸ் சம்பந்தமாக ஹர்த்தாலோ ஊர்வலமோ அல்லது பொதுக்கூட்டமோ அல்லது வேறுவித ஆர்ப்பாட்டங்களோ நடத்தக் கூடாதென்று சென்னை நகரப் போலீஸ் உதவி கமிஷனர் ராவ்பகதூர். அனந்தாச்சாரியின் மனுவின்பேரில் பிரதம மாஜிஸ்திரேட் ஜனப். அப்பாஸ் ஆலி கி. பு. கோ. 144-வது பிரிவின்படி தடையுத்திரவு பிறப்பித்திருக்கிறார். இந்த உத்திரவை 4-ந்தேதி மாலை சென்னை நகரெங்கும் டாம் டாம் மூலமாக பொது ஜனங்களுக்கு அறிவிக்கும்படி உத்திரவிடப்பட்டது. பின்னும் போலீஸார் ஆங்காங்கு சென்று வியாபாரிகள் கடைகளை மூடாமலிருக்கும்படிக்கும் அவர்களுக்குப் போதிய பாதுகாப்புகள் கொடுக்கப்படுமென்றும் அறிவிக்கும்படி டிவிஷன் போலீஸாருக்கு உத்தரவு செய்யப்பட்டது.



# வேடிக்கை சம்பாஷணை.



புருஷன்:—என்ன பெண்ணே! கத்திரிக்காயில் காலும் கையும் முளைத்ததுபோலிருக்கிறாயே!

நாயகி:—ஆமாம்! நான் நெட்டைக் கொக்குபோல் இல்லை!

புருஷன்:—நீ குறுங்கழுத்தி.

நாயகி:—நீ ஒட்டைக் கழுத்தன்.






# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

(479-ம் பக்கத் தொடர்ச்சி.)

அம்மனிதர்:—(என்னைப் பார்த்து) ஓஹோ! ஒரு வேளை நான் கொடுக்கிறேனென்று சொல்லும் தொகை போதாதோ?—நல்லது; அதைப் போல் இரண்டு மடங்கு தருகிறேன். 20,000 ரூபாய் தருகிறேன்! சம்மதந்தானே?—என்றார்.

நான்:—உண்மையாகவே எனக்கும் உங்கள் மகளுக்கும் மந்திரமோதிக் கலியாணம் நடக்க வேண்டுமோ?—என்று கேட்டேன்.

அவர்:—ஆம் யதோக்தமாய் சாஸ்திரப்படிக் கலியாணமாக வேண்டும்—என்று பதில் சொல்ல,

நான்.—ஏன்? விளையாட்டாகக் கலியாணம் நடந்தால் உங்கள் பெண்ணின் மனம் நிம்மதியடையாதோ?—என்று கேட்டேன்.

இதைக் கேட்டதும் "அல்ல; ஏன் சாஸ்திரப்படி இக்கலியாணம் நடந்தாகவேண்டுமென்பதற்குத் தகுந்த காரணங்களிருக்கின்றன" என்றவர் பதில் கூறினார். "அக்காரணங்கள் என்னவோ?" என்று நான் கேட்டதற்கு அவர் "ஆ! அக்காரணங்களை உங்களுக்குச் சொல்லமுடியவில்லையே யென்று தான் வருத்தப்படுகிறேன்!" என்றார். உடனே நான் "உண்மையான கலியாணம் எப்படி நடக்கும்? இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எத்தனையோயிருக்கின்றன! பிராமணர்கள் வந்து தானே கலியாணத்தை நடத்தி வைக்க வேண்டும்" என்று சொன்னேன். இதைக் கேட்டவுடனே அவ்வயோதிகர் என்னைப் பார்த்து "இந்த விஷயங்களைப் பற்றி நீங்கள் சிறிதும் கவலை கொள்ளவேண்டாம். சகல ஏற்பாடுகளையும் நான் செய்து தயாராகவே வைத்திருக்கிறேன். இரகசியக் கலியாணம் வெகு சுலபமாய் முடிந்து விடும். இதனால் மீனாளின் மனதும் திருப்தியடைந்து விடும். உண்மையே. ஆனால் என் மகளுக்கு உண்மையாகவே விவாகம் நடந்தேற வேண்டுமென்பது என்னபிப்பிராயம். இவ்விஷயத்தில் நீங்கள் அவளுடைய கணவனாகவிருந்து எனக்கு உதவி புரிய வேண்டும். கலியாணமான அடுத்த நிமிஷமே உங்கள் கையில் ரொக்கப்பணமாக 20,000 ரூ கொடுத்து விடுகிறேன்" என்றார்.

அடுத்த நிமிஷம் அவர் தன் நாற்காலியை விட்டெழுந்து அவ்வறையி லிருந்த ஒரு பீரோவைத் திறந்து அதினின்றும் ஒரு சிறிய கைப்பெட்டியை யெடுத்துக் கொண்டு வந்து அப்பெட்டியைத் திறந்தார். பிறகு அப்பெட்டியி னின்றும் ஒரு நோட்டுக்கட்டை யெடுத்து என் கண் முன் காட்டி டாக்ட ரவர்களே! நான் கேட்கும் உதவியைச் செய்வீராகில், இப்புதிய நோட்டுக ளனைத்தும் உம்மைச் சேர்ந்ததாய் விடும்'' என்றார்.

நேராக பாங்கிலிருந்து வந்த அந்த நோட்டுகளை நான் பார்த்தேன். அந் தக் கட்டிலுள்ள ஒவ்வொரு நோட்டும் ஒரு நூறு ரூபாய் நோட்டாக விருந்த தைக் கண்டேன். பிறகு அந்த நோட்டுக் கட்டைக் கையில் வைத்துக்கொண் டிருந்த அம்மனிதரை யுற்றுப் பார்த்தேன். அதே சமயத்தில் அம்மனிதரும் என்னை உற்றுப் பார்த்தார். அவரது பார்வை என்னை நடுங்கச் செய்தது. உச்சி முதல் உள்ளங்கால் வரையில் என் தேகம் சிலிர்த்தது. பேய்தான் மனித ரூபமாக என் முன்னால் நின்று கொண்டு என்னைப் பணத்தினால் வசப் படுத்தப் பார்க்கிறதோ என்ற சந்தேகம் ஏற்பட்டு விட்டது.

என் தேகம் நடுங்குவதை அம்மனிதர் பார்த்துவிட்டுச் சிரித்தார். பிறகு என்னை நோக்கி "டாக்டவர்களே; நீங்கள் எதற்காகச் சந்தேகப்பட்டுக் கொண்டு மயங்குகிறீர்களென்று எனக்குத் தெரியவில்லை. மீனாளுக்குச் சாகுந் தருணத்தில் சந்தோஷத்தை நாம் கொடுக்கிறதற்காக நாம் அவளை யேமாற்று கிறோமாதலால் இதில் நமக்குச் சிறிதும் பாவம் கிடையாது. என்ன? இந்த உதவியைச் செய்கிறேனென்று வாக்குறுதி கொடுங்கள்'' என்றார்.

இவ்விதமாக அம்மனிதர் கையில் நோட்டுக்கட்டை வைத்து என் கண் ணைப் பறித்த வண்ணம் என் மனதையும் தன் வயமாக்கிப் பறித்து விட்டார். நேயர்களே! அன்பீர்! ஒரே ஒரு க்ஷணத்திற்கு இத்தன்மையதான என்னுடைய நிலைமையில் நீங்கள் ஒவ்வொருவரும் இருப்பதாக எண்ணிக் கொள்ளுங்கள். என்னுடைய வாழ்நாள் முழுதும் நான் சிரமப்பட்டு ஒருவனுக்கு அடிமையாக வேலை செய்தாலும் இவ்வளவு பணம் எனக்குச் சேருமா? நான் பணத்தின் பேரில் அதிக ஆசைப்படவில்லை. உண்மையில் எனக்குப் பேராசையே கிடை யாது. இருந்தாலும் இருபதினாயிரம் ரூபாய் என்னிடமிருந்து விட்டால், வெகு நாட்களாக என் ஏழை மனம் விரும்புவதைக் கொடுத்துக் கொண்டு நீதிநெறி தவறாமலும் கிஞ்சித்தாவது கவலையென்பதில்லாமலும் நான் ஜீவனம் செய்வேனன்றோ? கவலையின்றிச் சுகத்துடன் ஜீவிக்க வேண்டுமென்பதே என் பெரிய ஆசை! என்னைத் தன் வசமாக்க முயற்சி செய்யும் அவ்வயோதிக ரது வார்த்தைகளைக் கொஞ்சமாவது காதில் போட்டுக்கொள்ளக் கூடாதென் றெண்ணினேன். ஆனால் முடியவில்லை. அம்மனிதர் சொல்லும் விஷயத்தில் நான் செய்யவேண்டிய உபகாரம் மிகவும் சொற்பமானதே. எனக்கு மனைவி யாகும் பெண் இன்னுங் கொஞ்சநேரத்தில் நிச்சயமாக சாகப் போகிறாள். அப்பால் மறுபடியும் என் பந்தம் விட்டுப் போகிறது. இந்தக் கலியாண விஷய மும் எல்லோருக்குந் தெரியாமல் இரகசியமாயடங்கிவிடும்.........

அந்தோ அம்மனிதர் வைத்திருந்த நோட்டுகளைப் பார்க்கப்பார்க்க என் மனம் அம்மனிதரின் பக்கமாகவே திரும்பிவிட்டது. இவ்வுலகம் பணத்தினா லேயே பாழடைகின்றது. ஆனால் இந்த நோட்டுகளைப் பார்த்துக்கொண்டிருக் கும்போதெல்லாம் பணத்தினாலுண்டாகும் கெடுதிகளை நான் அறவே மறந்து

விட்டேன். ஆஹா! இந்தச் சமயத்தில் உண்மையில் கொஞ்சமாவது எனக்குத் தெரிந்திருக்கும் பட்சத்தில் நான் அந்த நோட்டுக்கட்டை நெருப்பிலேயே எறிந்திருப்பேன்! நான் சொல்லுவது உங்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்குமோ? எனது ஜீவனத்திற்கே என்னிடம் பணமில்லாமலிருந்தது. உங்களிடம் ஒற்றைக்காசு கூட இல்லாமலிருந்து உங்கள் முன் இருபதினாயிரம் ரூபாயைக் காட்டி ஒரு சிறிய உதவியை நீங்கள் செய்யும் பட்சத்தில் அந்த நோட்டுகளனைத்தும் உங்களைச் சேர்ந்து விடுமென்றால் நீங்கள் சிறிதாவது தயங்குவீர்களோ? கிஞ்சித்தாவது யோசனை செய்வீர்களோ? ஒருகாலும் செய்யமாட்டீர்களென்பது எனது உறுதியான எண்ணம். நானும் ஏழ்மை ஸ்திதியிலுள்ள மனிதனே! ஆகவே என் மனமும் கொஞ்சங் கொஞ்சமாகப் பணத்தின்கண் வயமாகிவிட்டது. ஆம்! அம்மனிதர் கூறின நிபந்தனைகளுக்கு நான் உடன்பட்டேன் !! வேறு என் செய்வது!!!

நான் உடன்பட்டவுடனே அம்மனிதர் பெரிதும் திருப்தியடைந்தார். சுற்றி விட்டெறியப்பட்ட வலையில் பட்சி அகப்பட்டுக் கொண்டால் வேடனுக்கு என்ன திருப்தியும் சந்தோஷமும் உண்டாகுமோ அதேவிதமான திருப்தியும் சந்தோஷமும் இம்மனிதருக்குண்டாயின.

அடுத்த நிமிஷம் அவர் தம் கையிலிருந்த நோட்டுக் கட்டைப் பெட்டியில் வைத்துப்பூட்டி விட்டு அப்பெட்டியை பீரோவில் வைத்து அதையும் பூட்டிக்கொண்டார். பிறகு அவர் சுவற்றில் மாட்டப்பட்டிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். உடனே என்னைப்பார்த்து "இனி நாம் தாமதம் செய்யலாகாது. எல்லாம் தயாராயிருக்கிறது. ஐயா! என்பின் வாருங்கள்" என்று சொன்னார். இந்தச் சமயத்தில் என்னுடைய நிலைமையே எக்குத் தெரியாமற் போய்விட்டது. என் இருதயம் படபட வென்று அடித்தது. பணத்தை முன்னிட்டு என்னையே நான் தாரை வார்த்துக்கொண்டு முன் பின் அறியாத ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளப்போகிறேன். நண்பர்களே! தற்சமயம் நான் எவ்வளவு புத்திசாலித்தனமாகப் பேசினாலும் அந்தச் சமயத்தில் என் மனம் பணத்தையே நாடிக்கொண்டிருந்தது. என் மனதைத் திருப்ப என்னால் முடியவில்லை. ஆகவே அம்மனிதர் முன்னே செல்ல நான் பின்னே சென்றேன்.

என்னை வீட்டினுள்ளே விட்ட வேலைக்காரன் வீட்டு வாயிற்படியில் நின்று கொண்டிருந்தான். அவனைப்பார்த்து என் மனிதர் "என்ன? எல்லாம் தயாரா யிருக்கிறதா?" என்று கேட்க, அவன் "எல்லாம் தயாராயிருக்குதுங்க. இதோ மோட்டார்காரும் தயாராய் வந்திருக்குதுங்க" என்றான்.

அவ்வளவுதான்! என்னை மோட்டாரில் ஏறிக் கொள்ளும்படி அம்மனிதர் சொன்னார். நான் சற்றுத் தயங்கினேன்! அவர் நான் தயங்குவதைக் கவனித்து "நீங்கள் ஏன் மயங்குகிறீர்களென்று எனக்குத் தெரிகிறது. கலியாணம் ஸ்ரீகந்த சுவாமி தேவாலயத்தில் நடக்கவேண்டு மென்பதாக முன்னாலேயே ஏற்பாடாய் விட்டது! மீனாளைக் கோவிலிலேயே காணலாம். நாம் தான் கோவிலுக்கு முன்னால் போகவேண்டும்" என்றார். உடனே நானும் அவரும் மோட்டாரிலேறிக் கொண்டோம். மோட்டாரும் வாயுவேக மனோவேகமாய்ப் பறந்தது.

மோட்டார் எந்த வழியாய்ச் சென்றதென்றும் எந்தெந்த தெருக்களில் திரும்பியதென்றும் நான் கவனிக்கவேயில்லை. ஏனென்றால் என் முழு மனமும் அதற்குமேல் நடக்கப்போகும் ஆச்சரியமான விஷயத்திலேயே ஐக்கியப் பட்டிருந்தது. ஸ்ரீ கந்தஸ்வாமி கோவிலுக் கெதிராக மோட்டார் நிற்கும் போதுதான் என்னுடைய ஸ்வாதீனமும் எனக்கு வந்தது. மோட்டார் நின்றவுடன் நானும் என்னை யழைத்துக்கொண்டு சென்ற மனிதரும் கோவிலுக்குள்ளே நுழைந்தோம். பட்டை பட்டையாகத் திருநூறு பூசிக்கொண்டிருந்த ஒரு புரோகிதர் எங்களுக்கு நல்வரவு கொடுத்து உட்காரச் செய்தார். அப்பால் ஒரு நிமிஷத்திற் கெல்லாம் மற்றொரு மோட்டார் கோவிலின் வாயிலில் வந்து நின்றதாக எனக்குத் தெரிந்தது. அடுத்த நிமிஷம் ஒரு யௌவனப் பெண் மோட்டாரினின்றும் மெதுவாக இறங்கினதைப் பார்த்தேன். அவளது முகம் மட்டும் முகம்மதியஸ்திரீயைப் போல் ஏதோ காரணத்தால் மூடப் பட்டிருந்தது. அவள் மோட்டாரை விட்டுக் கீழே யிறங்கும்போது அவள் கீழே விழுந்து விடாமல் ஒரு மனிதன் அவளைத் தாங்கிக்கொண்டான். பிறகு அம்மனிதனே அப்பெண்ணை மெதுவாக அழைத்துக்கொண்டு கோவிலுக்குள் நுழைந்தான். அப்பெண் நடந்த விதத்திலிருந்தே அவள் மிக்க பலஹீனமாயிருக்கிறாளென்று அறிந்துகொண்டேன். இப்பெண்மணியே மீனாளென்றும் இவளையே நான் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்றும் எனக்குத் தெரிந்தது. அவளது முகத்தை நன்றாய்ப் பார்க்கவேண்டு மென்ற ஆவல் என்னைப் பெரிதும் தூண்டியது. ஆனால் அவளணிந்து கொண்டிருந்த முக மூடியால் அவள் முகத்தைச் சரியாய்க் காண முடியவில்லை.

அவள் என்னையும் கடந்து ஸ்ரீ கந்தஸ்வாமி சன்னிதானத்தில் போய் நின்றவுடன், என்னைப்பார்த்து அவளுடைய தந்தை "உம்-ஆகட்டும்!" என்று தூண்டினார். அவரா தூண்டினார்? அவரிடமிருந்த பணமன்றோ என்னைத் தூண்டியது! உடனே நான் அப்பெண்ணின் பக்கத்தில் போய் நின்றேன். அடுத்த நிமிஷம் பிராமணர் வந்து சுருக்கமாக மந்திரங்களை ஓதினார். என்னிடம் கொடுக்கப்பட்ட மாலையையும் தாலியையும் நான் அப்பெண்ணுக்குச் சூட்டினேன். எனக்கு அவள் மாலை சூட்டும்போது அவளுடைய கரத்தை மெதுவாகத் தொட்டுப்பார்த்தேன். இந்தச் சமயத்தி லெல்லாம் ஏதோ கனவு கண்டவனைப்போல் பிரமித்து இருந்தேன்.

இந்த அதிசயமான கலியாணத்திற்கு சாட்சிகளாக இரண்டுபேர் வந்திருந்தார்கள்.

ஸ்ரீ கந்தஸ்வாமி கடவுளின் முன்பாக சாஸ்திரப்படி எனக்கும் மீனாளுக்கும் கலியாணம் நடந்தாய் விட்டது. ஆனவுடனே நானும் என் மனைவியும் அவளுடைய தகப்பனாரும் ஒரு மோட்டாரி லேறிக்கொண்டோம். நான் முகத்தை மூடிக்கொண்டிருந்த என் மனைவியின் பக்கத்தில் உட்காரவேண்டு மென்றும் அவளுடன் பேசி அவளுடைய உண்மையான நிலைமையை யறிந்து கொள்ளவேண்டு மென்றும் முயன்று பார்த்தேன். ஆனால் எனக்கும் அவளுக்கும் நடுவே அவளுடைய தந்தை யுட்கார்ந்து கொண்டு ஏதேதோ சில பொது விஷயங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்து விட்டார். இதனால் நான் என் மனைவியுடன் ஒரு வார்த்தைகூட பேச முடியாமற் போய்விட்டது.........

# “ ஆனந்தபோதினி ” பஞ்சாங்கம்.

**பிரஜோற்பத்தி௵ மாசிமீ—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854,**
**பசலி 1341, கொல்லமாண்டு 1107, ஹிஜரி 1350,**
**இங்கிலீஷ் 1932௵ பிப்ரவரிமீ—மார்ச்சுமீ**

| மாசிமீ | பிப்ரவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | சனி | சஷ்3-48 | அஸ்8-23 | சித்60 | விஷ்ணுபதி புண்யகாலம்,<br>ரதசப்தமி, மஹா சப்தமி |
| 2 | 14 | ஞா | சப்10-5 | ப❋15-40 | சித்60 | கிருத்திகை |
| 3 | 15 | திங் | அஷ்15-13 | கிரு21-55 | மர21-55 அ | கடன்நீக்க, சுரங்கம்வெட்ட |
| 4 | 16 | செவ் | நவ18-50 | ரோ26-35 | அ26-35சி | உழவு செய்ய |
| 5 | 17 | புத | தச20-35 | மிரு29-28 | சித்60 | சர்வ முகூர்த்தம் செய்ய |
| 6 | 18 | வியா | ஏகா20-25 | திரு30-35 | மர30-35அ | சர்வ,மத்வ,பீஷ்ம ஏகாதசி,<br>பீஷ்ம, வராஹ துவாதசி |
| 7 | 19 | வெ | து18-15 | புன29-38 | சி29-38மர | மீஞயனம் நா-47-20-வி. |
| 8 | 20 | சனி | திர14-28 | பூச27-10 | சி27-10மர | பிரயாணம் செய்ய |
| 9 | 21 | ஞா | ச○8-53 | ஆயி23-18 | சி23-18மர | பௌர்ணமி, நவகிரகசாந்தி |
| 10 | 22 | திங் | பௌ2-40<br>பிர55-25 | மக18-23 | ம18-23சித் | மாகபகுளம், மாசி மகம் |
| 11 | 23 | செவ் | துதி47-45 | பூர12-53 | சி12-53அ | |
| 12 | 24 | புத | திரி40-5 | உத்7-0 | அ7-0மர | |
| 13 | 25 | வியா | சது32-48 | அஸ்1-20<br>சித்55-58 | சித்60 | |
| 14 | 26 | வெ | பஞ்25-55 | சுவா51-18 | சித்60 | |
| 15 | 27 | சனி | சஷ்20-0 | விசா47-35 | சித்60 | |
| 16 | 28 | ஞா | சப்1௪-58 | அனு44-50 | மர60 | |
| 17 | 29 | திங் | அஷ்11-0 | கே43-15 | சித்60 | |
| 18 | 1932௵ மார்ச்சுமீ 1 | செவ் | நவ8-10 | மூல42-53 | அ42-53சி | |
| 19 | 2 | புத | தச6-40 | பூரா43-38 | அமி60 | |
| 20 | 3 | வியா | ஏகா6-23 | உத்45-35 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 21 | 4 | வெ | து7-20 | திரு48-45 | மர48-45சி | பிரதோஷம் [விதைக்க |
| 22 | 5 | சனி | திர9-33 | அவி52-13 | சி52-13அ | மஹா சிவராத்திரி, விதை |
| 23 | 6 | ஞா | ச●12-48 | சத58-20 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 24 | 7 | திங் | அமா17-3 | பூரட்60 | மர60 | திருதினஸ்பிருக் [சனம் |
| 25 | 8 | செ | பிர22-23 | பூர4-40 | மர4-40அ | பால்குணசுத்தம்,சந்திர தரி |
| 26 | 9 | புதன் | துதி28-28 | உத்11-45 | சி11-45மர | சுப முகூர்த்தம் செய்ய |
| 27 | 10 | வியா | திரி34-53 | ரே19-18 | சி19-18அ | சர்வ முகூர்த்தம் செய்ய |
| 28 | 11 | வெ | சது41-35 | அஸ்27-5 | அ27-5சித் | மாச சதுர்த்தி விரதம் |
| 29 | 12 | சனி | பஞ்47-58 | பர34-40 | சி34-40அ | தானியம்களஞ்சியம்வைக்க<br>மூலிகை உபயோகிக்க |

| | | | |
|---|---|---|---|
| ராகு<br>சுக் | | | |
| சூரி<br>செவ்<br>சனி<br>புத | 3-கும்ப-செ<br>6-கும்ப-புத<br>19-மே-சுக்கி<br>23-மீன-புத | | குரு |
| | | | கே |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.